# காவிரி

## (கவிதைத் தொகுப்பு)



வெளியீடு :

**பைந்தமிழ்ப் பதிப்பகம்**

காங்கயம் சாலை,

கொடுமுடி – 638 151.

# காவிரி

## (கவிதைத் தொகுப்பு)





தொகுப்பாசிரியர்கள் :

கொடுமுடி சு. அ. பிரகாசம்
(இ)லிங்கத்தூர் தீரன் அரசு
கோட்டை செல்வம்

# படையல்

(நேரிசை வெண்பா)

அன்னைத் தமிழ்நலமே ஆருயிராய்க் கொண்டுழைத்த
முன்னையோர்க் கெல்லாம் முழுமையுற—இந்நூலை
அன்புறவே நாங்கள் அணியாய்ப் படைக்கின்றோம்
நின்றுபுகழ் ஓங்க நிலத்து !

தொகுப்பாசிரியர்கள்

---

முதற் பதிப்பு :

திருவள்ளுவராண்டு – 2019 – கி. பி. 1988

---

விலை : உருபா. 10–00

---



---

முகவரி :

**க. அ. பிரகாசம்,**
R. S. மருத்துவமனை,
காங்கயம்–சாலை,
கொடுமுடி–638151
பெரியார் மாவட்டம்.

**தீரன் அரசு,**
(இ)லிக்கத்தூர்–639127
உப்பிடமங்கலம்–அஞ்சல்
கரூர் வட்டம்,
திருச்சி மாவட்டம்.

---

**கோட்டைசெல்வம்,**
கோட்டைக்காட்டுவலசு–638109.
தட்டாம்பாளையம்–அஞ்சல்,
சிவகிரி–வழி, பெரியார் மாவட்டம்.

---

அச்சிட்டோர் : **கல்பனா அச்சகம்.**
36, திண்டுக்கல் சாலை. கரூர்–639 001.

இராணா. கு. வெ. லெட்சுமணன்
(தாளாளர், ஈரோடு கலைக்கல்லூரி)
114, வளையக்காரத் தெரு, ஈரோடு-1



# வாழ்த்து

காவிரியின் கனிவாலே
வேளான் வளத்தில்
வேழமாய் விளங்கிக் கொண்டிருக்கும்
கொங்கு நாட்டின்
கொடுமுடி சார்ந்த
தம்பிகள் :
பிரகாசம்,
தீரன் அரசு,
கோட்டை செல்வம்,
ஆகியோர் தொகுத்து வழங்கும்
காவிரி
கவிதைத் தொகுப்பு
தமிழாலும், கற்பனை வளத்தாலும்
இலக்கியங்களோடு ஒப்புநோக்கும்
தரம் வாய்ந்தது
இளைஞர்களின் இனிய முயற்சிக்கு
என் அன்பு வாழ்த்துக்கள் !
வளர்க அவர்கள்தம் தமிழ்த்தொண்டு

நாள்: 29-5-88
ஈரோடு.

அன்புடன்.
க. வெ. லெட்சுமணன்

# காவிரிக்கரைக் கவிஞர்கள் !

என் இளமைக் கனவுகளின் சிதறல்கள் 'காவிரிக் கவிதைகள்' பாடி நடந்துவரும் அந்தப் பாவை எங்கள் பள்ளி விளையாட்டு மைதானத்தைக் கூட வெள்ளம் பெருக்கெடுத்து வந்தபோது எட்டிப் பார்த்துவிட்டுச் சென்ற இனிய நினைவுகள் இன்றும் எனக்குள் இசைவடிவாகி நிற்கின்றன.

இன்று காவிரிக்கரையின் கரையில் வாழும் எங்கள் மரபின் மைந்தர்கள் தொடுத்துத் தந்த மாலை என் கண்முன் வைக்கப்பட்டுள்ளது. முகம் தெரியாத இந்தக் கூட்டத்தின் முன்னோடியான கவிஞர் திரு. க அ பிரகாசம் மருந்தைக் குழைப்பதுபோல தமிழைக் குழைத்துத் தருகிறார் !

இந்தக் கவிஞர்களில் சிலர், 'கிரிக்கெட்' விளையாட்டைப் பேரறிஞர் பெர்னாட்ஷாவைப் போல் வெறுத்தாலும் சொல் விளையாட்டில் தொடமுடியாத வற்றைத் தொட்டிருக்கிறார்கள் ! ரோஜாமலர்கள் நந்த வனத்தில் பூத்துக் குலுங்குகின்றன என்பதற்காக வேலிக் கிளுவையில் படரும் அரளியை நாம் விலக்கவேண்டிய தில்லை. இயற்கை படைக்கும் ஓர் அழகிய மலரை எந்தக் கலைஞனாலும் படைக்க முடியாதென்பது—கற்பனையல்ல - உண்மை !

இந்த 'மரபின் மைந்தர்கள்' வானவில்லை வளைத்து அதைக் கொண்டு மயில் இறகுகளுக்கு வண்ணம் பூசி இருக்கின்றார்கள் ! எண்ணக் கலவைகளால் இவர்கள், படைத்த 'சித்தன்னவாசல்' ஓவியங்களில் உணர்வும் உண்டு; உயிரும் உண்டு; கனவும் உண்டு; கற்பனையும் உண்டு; வேகமும் உண்டு; விவேகமும் உண்டு ! மான உணர்வும்

வருங்காலப் பொறுப்பும் ''அறக்கதை புராணம் இவற்றைப் புறங்கடத்த வேண்டும்'' என்ற புதிய விழிப்பும் இவர்களிடம் தென்படுகிறது. அன்பைத்தேடி அலையும் மனமும் தேள் போல் கொட்டும் சிறுமதியும் இங்கே சுட்டிக்காட்டப் படுகின்றன! கட்சிகள் காட்சிகள் மாறுவதும் கணக்கிடப் படுகின்றன! உடன்கட்டை ஏறும் 'ரூப்கன்வர்கள்' கண்ணீர்க் கதைகளும் அமைதிப் பொழிலாம் பாரதம் அல்லல் படும் நிலையும் விவரித்துப் பேசப்படுகின்றன!

கதிர்களைக் களத்தில் சேர்த்துப் பதர்களைப் பத்திரப் படுத்தும் சாதாரண மக்களின் சஞ்சலம் இங்கே விளக்கப் படுகிறது. வியர்வையை வாழ்த்தும் விரிவுரைகளும் அக்கிரமத்தைச் சாடிடும் அக்கினி எழுத்துக்களும் பொறி பறக்கின்றன! அடைக்கப்பட வேண்டியர்களின் ஆணைக்கு உட்பட்டு பாதுகாக்கப்பட வேண்டியவர்களையே பழி வாங்கும் பாரதத்தின் பாதகம் கண்டிக்கப்படுகிறது!

தமிழ்ப்பற்று இல்லாமல் தறுதலையாகிவிட்ட தமிழ்ச் சமுதாயம் பழிக்கப்படுகிறது—உண்மைகள் இங்கே ஊர்வலம் வருகின்றன!

'எது கவிதை?' என்பதைவிளக்கப் பட்டிமன்றம் தேவை இல்லை படிப்பவர் நெஞ்சில் 'சுறுக்' கெனத் தைத்தால் அது கவிதை! அது மெல்லிய உணர்வுகளின் சங்கீதம்! உலகு முழுவதும் காற்று நிறைந்திருந்தாலும் மூச்சு நின்று போன ஓர் உடலை அவ்வளவு காற்றும் உயிர்ப்பிக்க முடியாமல் போவது போல எத்தனைப் பக்கங்கள் எழுதிக் குவித்தாலும் அவை கவிதையாய்விடாது எதில் உயிர் இருக்கிறதோ அது கவிதை—அந்த முறையில் ''காவிரி'' ஒரு ஜீவநதி.

21—5—88

சக்திக்கனல்,
ஸ்ரீ வெற்றிவேல் இல்லம்,
5, வ.உ.சி தென்வடல்—சாலை,
தில்லை நகர், கோவை—26.

முனைவர் (டாக்டர்) கி. கருணாகரன்
பேராசிரியர்–தலைவர்.
முதன்மையர்–கலையியற்புலம், மொழியியல் துறை,
பாரதியார் பல்கலைக்கழகம், கோவை–46.

# நூல் நயம்

கவிஞர்கள் க. அ. பிரகாசம், தீரன் அரசு, கோட்டை செல்வம் ஆகியோர் தொகுத்துள்ள காவிரி என்னும் கவிதை தொகுப்பு கண்ணுக்கும் கருத்திற்கும் விருந்தாக அமைந்து இருப்பதினை இதில் இடம் பெற்றுள்ள கவிஞர்களின் கவிதைகள் காட்டுகின்றன.

மொழி, சமுதாயம், நாடு, இயற்கை என்ற பெரும் பிரிவுகளின் கீழ்

உழைப்பு, உயர்வு, பெண்டிர் பெருமை, தாய்நாடு, காதல். விளையாட்டு, சமுதாயக் கேடுகள், மூடப்பழக்க வழக்கங்கள் போன்ற தலைப்புகளில் கவிதை மலர்கள் இதில் இடம்பெற்றிருப்பது இக்கவிஞர்களின் சமுதாய உணர்வினையும் ஈடுபாட்டினையும் நமக்கு எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளது.

பாரதி தோற்றுவித்த புதிய பாரம்பரியத்தினை இக் கவிஞர்கள் சிறப்பாகக் கடைப்பிடித்துள்ளதன் வாயிலாக அவர்களது கவிதை அமைப்பிலே எளிமையினையும் மொழிப் பயன்பாட்டிலே கருத்தமைப்பிற்கு ஏற்ற சொல்–சொல் லமைப்பு ஆட்சியினையும் பார்க்க முடிகிறது !

எந்தவகைஇலக்கியமும் இதுபோன்று எளிமையாகவும் கருத்துப் புலப்பாட்டிலே திறன் மிக்கதாகவும் அமைந்தால் தான் இவ்விலக்கியத்தின் முழுப்பயனும் சமுதாயத்திற்குக் கிடைத்திடும் நல்வாய்ப்பு ஏற்படும்.

இந் நிலையில் இக் கவிஞர்களது படைப்புக்கள் அனைத்தும் கருத்தாழம் கொண்டவையாகவும் கருத்துப் புலப்பாட்டிலே ஆற்றல் மிக்கவையாகவும் சமுதாய உணர்வுகளைத் தட்டி எழுப்புபவையாகவும் அதே நேரத்தில் எளிமையானவையாகவும் அமைந்திருப்பதைக் கண்டு நான் உண்மையிலேயே பெருமை கொள்வதோடு இவர்களைப் பெரிதும் பாராட்டவும் கடமைப்பட்டுள்ளேன்.

இவர்களின் இத்தகைய நல்ல இலக்கியப் பணியை மனமுவந்து வரவேற்பதோடு தொடர்ந்து இப்பணி மேலும் சிறக்க வேண்டும் அதன் மூலம் தமிழும் தமிழ்ச்சமுதாயமும் சிறப்படைய வேண்டும் என்ற என்னுடைய நல் விருப்பத்தினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இக்கவிதைத் தொகுப்பினைத் தமிழ் உலகம் வாழ்த்தி வரவேற்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

*10-05-88* (கி. கருணாகரன்)
கோவை-46.



''மாதவமேகலை'' காப்பியக் கவிஞர் கோ

**நா. மீனவன், காரைக்குடி**

# கஸ்தூரி மான் !

(இன்னிசைப்பஃறொடை வெண்பா)

செந்தமிழ்ச்சொல் மீன்கள்
சிலிர்த்துவரும் ! ஓசைநயச்
சந்தம் அலைபுரளும் !
சார்பாய் இருகரைமேல்
கற்பனைப்பூ தேன்வடிக்கும்
காவினங்கள் சூழ்ந்திருக்கும் !
பொற்புடைய மோனைகளாம்
பூமுத்துக் கள்மின்னும் !
நெஞ்சக் கழநிகளில்
நீர்பாயப்–பேரறிவு
கொஞ்சிவரும்; சாலிகளாய்க்
கூத்தாடும் ! மேதினியில்
காணக் கிடைக்காத
கஸ்தூரி மான்மணமே
மாணக் கமழக்
கவிவெள்ளம் பொங்கிவர
பாண்டிக் கொடுமுடிப்
பாத்தொகை நூலாக
மாண்புப் பிரகாசம்
மாத்தமிழ்க்குத் தந்திட்ட
காவிரியை வாழ்த்திக்
களித்திடுவோம் ! பூவுலகில்
மாவியப் பாக
மனம் !

காரைக்குடி.
25–5–88.

நா. மீனவன்

## வானொலி அண்ணா

கலைச்செல்வர், இளசை எஸ். சுந்தரம், எம்.ஏ, பி.எட்.,
நிகழ்ச்சி அமைப்பாளர், திருச்சி வானொலி நிலையம்.

# அணிந்துரை

காவிரி – கவிதைத் தொகுப்பு கண்டேன். கவிஞர் பலரின் கூட்டு முயற்சி கண்நிறைய—கருத்து நிறையக் கவிதை உண(ர்)வு கிடைத்தது ; படைத்தது !

வாழ்க்கை ஒரு நிரந்தரப் பயணம் — அல்லது நிரந்தரத்தின் பயணம் ! பிரமைகளினூடே வாழ்ந்து கொண்டிருப்பவன் மனிதன் ; அதில் உண்மையைக்கண்டு சொல்பவன் கவிஞன் !

கவிதை காலத்தின் குரல்; காலத் தேவையின் கட்டாயம். இல்லாவிட்டால் அது மண்ணில் காலூன்றாமல் வான வெளியில் வட்டமடித்துக்கொண்டிருக்கும்.

இந்தக் கவிதை பூங்காவில் காலத்தை வென்று நிற்கும் கவிதைகள் பலவுண்டு ! பிள்ளை முயற்சிகளும் பிரதிபலிக்கின்றன !

''தோரணங்கள் கட்டிக் கட்டித்
துவண்டுவிட்டான் தமிழன் இங்கே''...... இது கவிஞர் திரு. கஸ்தூரிநாதனின் சோகப்பெருமூச்சு ; நமக்குந்தான் !

''உழைப்பிருந்தால் எல்லாமும் முடியும்—அதை
உணர்ந்தால்தான் நம்வாழ்வு விடியும் !''—இது

சோம்பல் கிழிசலைத் தைக்கும் உற்சாக ஊசிக் கவிதை ! கவிஞர் திரு. கஸ்தூரிநாதன் கவனிக்கத் தக்க கவிஞராக உருவாகி வருகிறார் என்பதை உணரமுடிகிறது !

''சமாதானப் புறாக்கள்—
இவற்றின் கழுத்தில் தொங்குவது
நேசக் கடிதங்களல்ல
நெருப்புக் குண்டுகள்!''....இது

கவிஞர் திரு. தீரன் அரசு அவர்களின் தீயுமிழும் வார்த்தைகள்! உண்மைதான், இன்றைய சமாதான மாநாடுகளில் வெள்ளைப் புறாக்களே விருந்தாகப் படைக்கப்படுகின்றவாம்!

கவிஞர் க. அ. பிரகாசம் ஒரு பண்பட்ட கவிஞராக உருவாகி இருப்பது பளிச்சென்று தெரிகிறது.

''உள்ளத்தை ஒருநிலைப் படுத்து – அதை
உயர்த்திடு தாழ்வாய்ப் போவதைத் தடுத்து!''
''ஆலத்தை உண்பதா அறிவு? – நீ
ஆய்ந்திடு, தேர்ந்திடு, பூண்டிடு செறிவு''—
''நீயொரு புதுவழி காட்டு – அதன்
நிகரிலாத் தன்மையால் மாண்பினைக் கூட்டு!''

ஆழமாக நெஞ்சில் பதியும் அற்புத வரிகள்; நம்பிக்கை ஒளியூட்டி நாளைய வாழ்வுக்கு வழிகாட்டுவது கவிஞனின் கடமையாகிறது!

இராசத்தானின்....

''ஒரு ரூப்கன்வருக்காக உலகம் இன்னும்
ஓயாமல் அழுகிறதே....இங்கே
திரும்பிய இடமெல்லாம் ரூப்கன்வர்கள்....

இது கவிதாயினி சந்திராவின் சத்தான கவிதை.

இப்படி இக் கவிதைத் தொகுப்பில் ஒவ்வொருவரும் உன்னதத்தைத் தொட முயன்றிருக்கின்றார்கள்!

புதிய சிந்தனை, புதிய சொல்லாட்சி, புதிய உவமை இவை இலக்கியச் செழுமைக்கு இன்றியமையாதன. எழுதத் தொடங்குபவர்கள் இதை இதயத்தில் ஏந்திக் கொள்வது நலம், முயற்சிகள் தொடரட்டும்....!

இவண்.

25–5–88

இளசை சுந்தரம்

# நன்றி

பாத்தொகுப்பாம் காவிரியைப் படைப்ப தற்குப்
பாடுபட்ட பைந்தமிழ் உள்ளங் கட்கும்,
பாத்தொப்பைச் சீர்தூக்கிப் பார்த்துத் தக்க
பாராட்டும் அணிந்துரையும் வாழ்த்தும் தந்த
ஏத்துபுகழ் சான்றோர்க்கும், இந்நூ லின்கண்
இடம்பெற்றே பலநூறு நாட்க ளாகக்
காத்திருந்த பாமணிகள் அனைவ ருக்கும்,
'கல்பனா' அச்சகத் தார்க்கும்–மற்றும்,

எல்லையற்ற பேரன்புக் குரியோ ராக
இலங்குகின்ற பெருந்தகையாய் இப்ப ணிக்கே
நல்லதொரு கரணியமாய்க் கால்கோ ளிட்ட
நண்பார்ந்த குழிபிறை நாத ருக்கும்,
தொல்லைகரு தாமல்நாள் தோறும் அஞ்சல்
தொடர்புக்கு ஒத்துழைத்த அஞ்சல் கூட
நல்லன்பர் பெருந்தகையோர் கட்கும் எங்கள்
நன்றியினை யுரித்தாக்கிக் கொள்வ மாமே!

இன்னணம்,
அன்புடன்,
தொகுப்பாசிரியர்கள்.

# எது வேண்டும் தமிழுக்கு... ?

[ஆறாவது உலகத்தமிழ் ஆராய்ச்சி மாநாடு 15–19 நவம்பர் 1987 மலேசியாவில் நடைபெற்றது. அம்மாநாட்டுக் கவியரங்கில் (19—11—87) முழங்கப் பட்ட கவிதை இது]

1 இனிக்கின்ற தமிழே உன்னால்
இருக்கின்றேன் இன்னும் மண்ணில்
கனிக்குன்றே உன்னால் அன்றோ
கவிஞனாய் உலவு கின்றேன் !

2 என்னரும் மக்காள் உங்கள்
இதயத்தைத் தொட்டுச் சொல்வீர் !
என்ன நாம் செய்தோம்? அன்னை
இதந்தரு தமிழைக் காக்க !

3 பழங்கதைகள் நமக்குள் பேசிப்
பலகாலம் கடத்தி விட்டோம் !
கிழங்கதைகள் அவைகள் எல்லாம்
கிடத்துவோம் ஓரம் பார்த்து !

4. செந்தமிழின் பெருமை எங்கும்
சென்றடைய வழிகள் என்ன ?
சிந்திப்போம் ! முடிவு கண்டு
செயல்படுத்த முயற்சி செய்வோம் !

5. உலகத்தார் நம்மை வைத்தே
உயர்வடைந்து முதன்மை பெற்றார்!
கலகத்தால் தமிழன் மட்டும்
கதறுகிறான் அமைதி யின்றி!

6 காரணத்தை எடுத்துச் சொன்னால்
கண்சிவக்கும்! கண்ணீர் பொங்கும்!
தோரணங்கள் கட்டிக் கட்டித்
துவண்டுவிட்டான் தமிழன் இன்று!

7. அரசியலில் வீழ்ந்து நாமும்
அடிவருடக் கற்றுக் கொண்டோம்!
உரசுகிற கவர்ச்சி கண்டு
உருகுகிற நிலையில் நின்றோம்!

8. இனமானம் இருக்கும் என்றால்
ஏன்இந்த அவலம்! ஈனம்!
மனவூனம் அடைந்து விட்டால்
மற்றெங்கு மானம் நிற்கும்!

9. போகின்ற இடத்தில் எல்லாம்
பூமியிலே தமிழன் மட்டும்
சாகின்றான் உதைகள் பட்டு!
சங்ககால பெருமை கெட்டு!

10 இதுஒன்றே நிலைமை என்றால்
எதற்காகத் தமிழும் நாமும்?
புதுவையம் படைத்துக் காட்ட
புலவர்களே தயக்கம் ஏனோ?

11. காதலியைப் பற்றி வெற்றுக்
கவியெழுதும் பழக்கம் விட்டு
பூதலத்தில் புதுமை செய்ய
புறப்படடா தமிழா ! இன்றேல்

12. சாதல்நலம் அதனை யேனும்
சட்டென்று செய்து கொள்வோம் !
போதனைகள் கேட்டுக் கேட்டு
புளித்ததடா தமிழர் வாழ்வு !

13 இலக்கியத்தின் பெருமை பற்றி
இனியாநாம் உணர வேண்டும் ?
துலக்கியெடு உனது நெஞ்சை
தொடங்குஇனி புதிய பாதை !

14 கண்ணகியை சீதை தன்னை
கற்புடைய பெண்ணா என்று
அன்றன்று பட்டி மன்றம்
அடுத்தடுத்து நடத்த வேண்டாம் !

15. அறக்கதைகள் புராண மெல்லாம்
அரைநூறு ஆண்டுக் கேனும்
புறங்கடத்து ! புதிதாய் ஞாலம்
பூப்பதற்கு வழிகள் தேடு !

16. அருந்தமிழாம் நங்கைக் கென்று
அறிவியலாம் நம்பி பார்த்து
திருமணத்தை நடத்தி வைப்போம்
திக்கெட்டும் புகழைச் சேர்ப்போம் !

17. உழைக்கின்ற மரபை நாளும்
உருவாக்கு ! பொய்கள் போக்கு !
நுழைகின்ற துறைகள் தோறும்
நுண்ணறிவு விளக்கை ஏற்று !

18 எதுவேண்டும் தமிழுக் கென்று
எதற்காகப் போர்கள் இங்கு !
இதுவேண்டும் தமிழுக் கின்று !
இருக்கின்ற தெல்லாம் நன்று !

19. விழிப்புத்தான் இனிமேல் வேண்டும்
வீரம்தன் மானம் வேண்டும்
எழுச்சிகொண் டெழுதல் வேண்டும்
எந்தமிழ்ப் புரட்சி வேண்டும் !



# அன்னைத் தமிழின் அகமகிழ்வு !

[ 18-11-87 மலேசிய தமிழ்நேசன் இதழில் இடம் பெற்ற பா ]

மலைநாடு தனைக்கண்டு மகிழ்வு காண
மங்கையவள் தமிழணங்கு இங்கே வந்தாள் !
கலையாவும் படைக்கின்ற கமலச் செல்வி
களிகூறும் மாநாட்டைக் கண்டு நின்றாள் !

விலைமிக்க ஆன்றோர்கள் கூடி நின்று
வெவ்வேறு துறைபற்றி ஆய்வு செய்தார் !
தலைமேவ அவைகண்டு தமிழாம் பெண்ணாள்
தாளாத பேரின்பம் தனக்குள் கொண்டாள் !

''உழைக்கின்ற வர்க்கத்தார் சேர்ந்து இங்கே
உயர்வாக எனைநெஞ்சில் வைத்தே உள்ளார்!
தழைக்கின்ற புதுநூல்கள் தமிழில் செய்ய
தடையேது புவிமீது உயர்ந்தே னென்றாள்!
விழைகின்றேன் இதுபோன்று உலக மெங்கும்
விரிகின்ற மனதோடு எனது மக்கள்
இழைக்கின்ற இடமெல்லாம் ஏற்றம் தந்தால்
எனக்கென்ன குறை''யென்று முறுவல் கொண்டாள்!

காவிரிந்த தமிழன்னை அவளின் ஆசைக்
கனவுகளை நனவாக்க நாமும் ஒன்றாய்
மூவிரண்டாம் மாநாட்டின் முடிவைப் போன்று
முன்னேற்ற நூல்களினைத் தமிழில் யாப்போம்!
நாவிரிந்த புலவர்களே நடுக்கம் இன்றி
நல்லதமிழ் நூல்படைக்க வழிகள் காண்பீர்!
பூவிரிந்த சோலையெனத் தமிழை வைக்க
புத்துலக இலக்கியங்கள் படைப்பீர் மேன்மேல்!

# இறைவன் படைப்பு

வானில் மேகம் தவழ்கிறது — பல
வசந்தக் கனவைத் தருகிறது!
கானம் இசைக்க அழைக்கிறது — ஒரு
கவிதை என்னுள் தழைக்கிறது!

வெள்ளைப் பூவாய்ச் சிரிக்கிறது — பல
விருந்து கண்ணில் படைக்கிறது!
கொள்ளை அழகை வடிக்கிறது — அது
கொஞ்சி எனக்குள் ஒலிக்கிறது!

மலையாய் விண்ணில் தவழ்கிறது – பெரு
மழையாய் மண்ணில் பொழிகிறது
விலையே இன்றி தொடர்கிறது – அதன்
விளக்கம் எனக்குப் புரிகிறது !

இறைவன் படைப்பு மிகப்பெரிது – அது
இயற்கை வடிவில் கிடக்கிறது !
மனிதன் முயற்சி மிகச்சிறிது – இதில்
மனமேன் தினமும் அலைகிறது ?

# எல்லாம் இருந்தும். ........

காடுண்டு நாடுண்டு கழனி யுண்டு
கவிபாடும் வண்ணத்தில் கலைகள் உண்டு !
ஆடுண்டு மாடுண்டு அனைத்து முண்டு !
அறியாத புதுமையிலே அகிலம் உண்டு !
பாடுண்டு பீடுண்டு பலனு முண்டு
பண்பாடு குறையாத பனுவல் உண்டு !
வீடுண்டு விளைவுண்டு வீர முண்டு
வீணாக சிலபேர்கள் புவியில் உண்டு !

புல்லுண்டு பூடுண்டு புதுமை யுண்டு
புலமைமிகு சாதனைகள் பலவும் உண்டு !
கல்லுண்டு முள்ளுண்டு கவலை யுண்டு
கணநேரம் களிக்கின்ற சுகமும் உண்டு !
நெல்லுண்டு நீருண்டு நிலமும் உண்டு
நிற்காமல் சுழல்கின்ற கோள்கள் உண்டு !
சொல்லுண்டு சுவையுண்டு சூதும் உண்டு !
சோம்பலில் வாழ்வோரும் புவியில் உண்டு !

பொன்னுண்டு பூவுண்டு பொட்டு முண்டு
போராட்டம் பேராட்டம் நாளும் உண்டு
மின்னுண்டு அணுவுண்டு மழையும் உண்டு
மின்னுகின்ற செல்வங்கள் பலவும் உண்டு!
என்றென்று சொல்வதிந்த உலகம் தன்னை
எல்லாமும் இவணுண்டு; ஆனால், ஒன்று
அன்பென்ற பேறுதனைத் தேடு கின்றேன்
அஃதெங்கும் இல்லாமல் வாடுகின்றேன்!

# பொது உண்மை புரியட்டும்!

இருக்கின்ற உலகத்தின் இனிமை யெல்லாம்
இதயத்தின் அளவாகும் எடுத்துக் கொள்வோம்!
வருகின்ற இன்பங்கள் யாவு மிங்கே
வாழ்கின்ற முறையொட்டி வளர்ந்தே செல்வோம்!
கருக்கொண்ட நாள்தொட்டு நம்மைக் கேட்டா
காரியங்கள் நடக்கிறது? எதுவு மில்லை!
தருக்குற்றுத் திரிவதிலே தகைமை இல்லை
தன்னைத்தான் அறிந்திட்டால் துயரும் இல்லை!

ஆடுகிறார் ஓடுகிறார் அறியா நெஞ்சார்
அடுக்கடுக்காய்ப் பொருள்சேர்க்க அடித்துக் கொண்டு
கூடுகிறார் குலவுகிறார்! தமக்குள் பின்னால்
கொடுக்குள்ள தேள்போலக் கொட்டிக் கொள்வார்!
வீடுமனை செல்வத்தைச் சேர்த்தே வைத்து
விளக்கடியில் விழிவைத்துக் காத்தும் நிற்பார்!
கூடுவிட்டுக் குருவியது பறக்கும் நாளில்
குவலயத்தின் நிலையாமை அறிந்து நோவார்!

இதுதானே வாழ்வாகும்; இதனை மக்கள்
இன்றளவும் உணராமல் ஏனோ....அந்தோ !
மதுவுக்கும் மாதுக்கும் மனத்தை விட்டு
மற்றுள்ள பொருள்களிலும் அடிமைப் பட்டு
எதுவுண்மை என்பதனை அறியா நின்று
இவ்வுலகில் உழலுகிறார்! இறுதி வந்தால்
பொதுவுண்மை புரிகிறது அதனால் வாரீர்
புத்தியுடன் துயர்வெல்ல முயற்சி செய்வோம் !

## ''உழைப்பிருந்தால் முடியும்''

'தொலைக்காட்சி'யில் பரிசு பெற்றது,

மண்ணாகிப் போனதொரு தேசம் – அதில்
மனம்பொருந்தி வீசுதின்று வாசம் !
விண்ணளவு கட்டிடங்கண் கூசும் – மிகு
விளக்கமுற அற்புதங்கள் பேசும் !

நாகசாகி கிரோசிமா அன்று – எரி
நரகமெனப் பீதிதந்த துண்டு !
வேகமாக அதுமாறி இன்று – பெரு
வியனுலகைக் காணுகிறோம் நன்று !

அழிந்ததடா சப்பான்எனச் சொன்னார் – அவர்
அப்படியே வாயடைத்து நின்றார் !
எழுந்ததடா புதுப்புரட்சி அங்கே – அவர்
ஏற்றத்திற்கு ஈடிணைதான் எங்கே !

இறந்துபின்னர் பிறப்பெடுத்த நாடு — அஃது
எல்லோர்க்கும் போடுதடா சூடு !
மறக்காமல் பாட்டிலிதைப் பாடு — அது
மண்ணுலகில் உழைப்பவரின் வீடு !

உழைப்பிருந்தால் எல்லாமும் முடியும் — இதை
உணர்ந்தால்தான் நம்வாழ்வு விடியும் !
தழைக்கின்ற காலமொன்று படியும் — இதைத்
தத்தெடுத்தால் சோம்பலிங்கு மடியும் !

# தோழா !

விண்ணோக்கிக் கலம்விட்டு மேலை நாட்டான்
விரைவாக அறிவியலில் மாலை போட்டான் !
கண்பார்த்துக் கதைசொல்லிக் காலம் தள்ளிக்
கற்பனையில் வாழுகிறார் நமது நாட்டில் !
பண்பாடிப் பாரதியும் புதுமை வேண்டிப்
பாடல்பல பாடிவைத்தான்! ஆனால், இங்கே
மண்மைந்தர் போராட்டம் நடத்து கின்றார் !
மாறாதா இந்தநிலை சொல்வாய் தோழா !

அரசியலில் தவறிழைத்த தலைவர் தம்மை
அந்நாட்டுக் குடிமக்கள் வெளியில் தள்ளி
சிரசரிந்து போடுகிறார்! மீண்டும் வந்தால்
செல்லாது அவர்பேச்சு! மக்கள் முன்னால் !
பரசுராமன் போன்றோர்கள் ஆண்ட தெல்லாம்
பழங்கதையாய்ப் போனதடா இந்த நாட்டில் !
பரத்தையரைப் போல்நாளும் க(ா)ட்சி மாறி
பாராள முயலுவதும் கொடுமை தோழா !

கருவறையில் இருக்கின்ற குழந்தை கூட
காதல்படம் பார்க்கின்ற நிலைமை வந்து
பெருவிரலை ஆட்டுதடா! அதனால், அன்றோ
பிறக்கின்ற சந்ததியும் மலடாய்ப் போச்சு !
உருவழிந்து போனாலும் உண்மை காக்க
ஒருவரையும் காணாது நமது அன்னை
செருமியழும் கண்ணீரைத் துடைக்க வேண்டி
தினவெடுத்து நீயேனும் வாராய் தோழா !

## திட்டம் வகுத்திடு தம்பி !

வெள்ளை நிறத்தவர் கொள்ளை நிறுத்திட
உள்ள பொருள்களை அள்ளிக்கொடுத்தனர் அன்று !
வந்த சுதந்திரம் நொந்து குலைந்திட
இந்தத் தலைமுறை சிந்தை இழந்ததேன் இன்று ?

இந்தச் சுதந்திரம் வந்து பிறந்திட
அந்தத் தலைமுறை வெந்து மடிந்ததேயன்று !
இன்ப சுதந்திரம் துன்பம் தொடர்ந்திட
இன்று வன்முறை எங்கும் தொடர்ந்ததா நன்று ?

அன்னை பாரதம் உன்னை நம்பியே
இன்னும் புன்னகை மின்ன வாழ்கிறாளிங்கு !
என்ன முடிவுஉன் இதயக் கூட்டிலே
இன்னும் குழப்பமாய் எழுந்து செல்வதுநீஎங்கு ?

குட்டை குழப்பிடும் கெட்ட மனிதரின்
கொட்டம் அடக்கிட திட்டம் வகுத்திடுதம்பி !
பொட்டைப் பயல்களாய் புவியில் உலவிடும்
மட்டக் கயவரை மண்ணில் புதைத்திடுஎம்பி !

பெற்ற சுதந்திரம் உற்ற துணையென
பற்றி உன்னையே வெற்றி யடைந்திடுமென்று
முற்றும் உணர்ந்துநீ முழுதாய் உழைத்திட
சற்றே முயன்றுநீ சரியாய் உழைப்பதேநன்று !



வி. கே. கஸ்தூரிநாதன், எம்.ஏ.,எம்.எட்.,
வள்ளுவர் நடுநிலைப்பள்ளி, குழிபிறை-622 402.

# ரூப்கன்வர்கள் !

வீட்டினிலே சுவர்களுக்குள் நிகழ்வ வெல்லாம்
விவாதக் களங்களென்றால் ஐய்ய மில்லை !
காட்டினிலே வாழ்பவைகள் தாமோ இங்கே
காட்சிதர வந்தனவோ எனத்தான் தோன்றும் !
கூட்டினிலே உயிரிருக்கும் வரையில் செய்யும்
கூத்துக்கள் கும்மாளம் கொட்ட மெல்லாம்
ஏட்டினிலே எழுதினுமே ஏடு போதா;
எடுத்துத்தான் உரைத்தாலும் நேரம் போதா!

கன்னியரின் வாழ்க்கையிலே எதிர்கொள் கின்ற
கப்பமெனும் தட்சணைதான் பூத மாக
முன்னிற்கும்! இப்பூதம் தன்னை வீழ்த்த
முடியாத பேருக்கு மண்ணெண் ணெய்தான் !
என்னென்ன கொடுமைகள்தாம் வாழ்வில் உண்டோ
எல்லாமும் பெண்களுக்கே உரிமை யென்றால்
என்றென்றும் கன்னியர்கள் ஒளவை வாழ்வை
ஏற்கத்தான் துணியாரோ எழுச்சி கொண்டே !

வருங்காலப் புத்துலகைப் படைப்ப தற்கே
வருகின்ற பெருந்தகையீர்! இராசத் தானின்
ஒருரூப்கன் வருக்காக உலகம் இன்னும்
ஓயாமல் அழுகிறதே! ஆனால், இங்கே....
திரும்பிய இடமெல்லாம் ரூப்கன் வர்கள்
திடமாக உடன்கட்டை ஏறா மல்தான்
அரியஉயிர் விட்டுக்கொண் டிருக்கின் றார்கள்
அதுபற்றி அழுபவர்கள் யார்யார் இங்கே !

மு. சந்திரா, எம்.ஏ , தான்தோன்றிமலை, கரூர்-639005

# செந்தமிழ்த் தேன் !

பொதிகை மலையில் பூத்தவள் வளர்ந்தாள்
எதுகை மோனையை ஏற்றவள் மகிழ்ந்தாள்
துதிக்கும் நாவினில் தோழியாய்த் தொடர்ந்தாள்
விதியை வென்றவள் வேகமாய் நடந்தாள் !

தமிழாம் அந்தத் தாரகைப் பெண்ணாள்
தமிழர்யார்க்கும் தன்னிரு கண்ணால்
அன்பினை நீராய் அன்னவள் ஊற்றி
மன்பதை தன்னை மகிழ்வுறச் செய்தாள் !

அகிலம் முழுதும் ஆதவன் ஒருவனே
அகத்தில் ஆணவம் அணுவும் வேண்டாம் !
புகைச்சல் மனதில் புன்மையுண் டாக்கிப்
பகையை வளர்க்கும் பண்பைச் சிதைக்கும் !

பழமையும் புதுமையும் பகுத்தவள் உரைத்து
கிழமையும் மாண்பும் கேட்டிடத் தொகுத்து
பயனுறும் பனுவல் பலப்பல அளித்து
வியனுல(கு) உய்ய வழிவகை செய்தாள் !

புவியெனும் பந்து புலர்ந்திட்ட போதே
செவியுற வந்த செந்தமிழ்த் தேனே
உயிருள வரைக்கும் உனையே யானும்
பயின்று, பயிற்றி பாடிடு வேனே !

கே. டி. மனோகரி, பிலிட்,பி எட்.,
பாய்லர் பிளாண்ட் பெண்கள் மேனிலைப்பள்ளி,
கைலாசபுரம், திருச்சி-622 014.

# ஏன் இந்த அவலம்...!

பல்வளம் நிறைந்த பாரத தேசம்
பாரினில் உயர்ந்த பண்டைதன் வாசம்
கல்வியில் சிறந்த கலைகளின் நேசம்
கயமையைக் கண்டால் கனன்றது கூசும் !

இப்படி யிருந்த இப்பெரு நாட்டில்
தப்படி போன்று தரிகெட வன்முறை
எங்கும் பரவ ஏன்இந்த அவலம் !
இளைஞர் நெஞ்சில் என்னதான் சபலம் !

அவலம் நிறைத்த அரசியல் கட்சிகள்
கவனம் சிதைக்கும் திரைப்படக் காட்சிகள்
தவறில் உழலும் தறுதலைக் கூட்டம்
தாய்த்திரு நாட்டில் தகுமோ வாட்டம் ?

சாதியின் பெயரில் சண்டைகள் வளர்த்து
போதையில் விழுந்து புலமையைத் தளர்த்து
நாளைய வாழ்வின் நன்மையை மறந்து
நாளும் திரிவதேன் நலத்தைத் துறந்து !

படித்தவ ரெல்லாம் பணிபெறல் என்பது
முடியாச் செயலென முனைந்திடல் வேண்டும்!
அடித்தள உழைப்பை அனைவரும் ஏற்று
பொடித்துடன் வறுமை போக்கிடல் நன்றே !

அமைதிப் பொழிலாய் அன்னை பாரதம்
அகிலம் முழுதும் ஆல்போல் படர
இளைய தலைமுறை இன்றே ஒன்றாய்
இணைந்து செயல்பட எழுச்சியுண் டாமே !

எஸ். சுகுமாரி, மு, சித. இராம. து, பள்ளி,
குழிபிறை, புதுக்கோட்டை மாவட்டம்.

# பெண்மையைப் போற்றிப் பெருமை அடைவோம் !

ஆணோடு பெண்ணிங்கே சமமென்ப தெல்லாம்
தேனாக இனித்திடச் சொல்லும் வாதமே !
இல்லம் யாவும் சென்று பார்த்தால்
உள்ள நிலையை உணர்ந்து கொள்வோம் !

எங்கும் பெண்கள் எப்படி உள்ளனர்?
உழைத்து உழைத்து ஒய்ந்த உடலும்
களைத்துச் சோர்ந்த கைகளும் காலும்
தெம்பிலாச் சிரிப்பும் தெளிவிலா நோக்கும்
இப்புவி தன்னில் எங்கு நோக்கினும்
மங்கையர் சொத்தாய் இருப்பதை அறிவோம் !

ஆடவர் பெண்களை அடிமைகள் ஆக்கி
நாடும் போது தேடும் பொருளாய்
நாளும் நடத்தும் காட்சியைக் காண்போம் !
ஒருசில இடங்களில் மாற்றம் தெரியினும்
பெரும் பகுதியும் நிலைமை இதுவே !

பெண்ணை மதித்துப் பேசி நாளும்
எண்ணுவ தெல்லாம் எடுத்துச் சொல்லிக்
கண்களைப் போன்று அவளைக் காக்கும்
கணவர் உள்ள இல்லத்தைப் பாரும்
நல்ல இல்லமாய் அது விளங்கி
எல்லா நலத்தையும் பெற்றுச் சிறக்கும் !

கொடுமைக் காரக் கணவன் தன்னைக்
கொண்ட இல்லாள் உள்ள குடும்பம்
நாளும் நாளும் தேய்பிறை ஆகி
வீழும் காட்சியை விரைவிலே காண்போம் !
எனவே பெண்மையைப் போற்றிக் காத்து
எல்லாச் சிறப்பும் பெற்று வாழ்வோம் !



சோம. முத்துராமன், எம் ஏ., பி.எட்.
குருவிக்கொண்டான்பட்டி – அஞ்சல்,
இராங்கியம்-வழி, புதுக்கோட்டை மாவட்டம்.

# கனவுகளைக் களைந்துவிடு....!

ஏ...தேச இயக்கத்தின்
நேச நண்பனே !

தேகம் சிலிர்க்க பூமியில் வியர்வை தெளித்துவிட்டு
கஞ்சிக் கலையத்திற்குள் கண்ணீர் உப்பிடுகிறாய் !

உன்னை மறந்து இன்னும் எத்தனை நாள்தான்
திண்ணையில் குந்திக் கனவைச் சுமப்பாய்......

கதிர்களைக் களத்தில் சேர்க்கிறாய்
பதர்களை ஏன் பத்திரப் படுத்துகிறாய்?

வயல்களில் பசுமை படைக்கிறாய் — உன்
வாசலில் ஏன் வறுமை வளர்க்கிறாய் !

உனது வியர்வை ஆவிநீர்(சோடா) ஊற்றித்தான்
மாட மாளிகைகளில் ம(ா)து விழாக்களும் !

பயணங்களுக்குப் பயன்படும் படகுகளாய் இருந்து
பலனற்றவனே — இனி
புயலாய் மாறிப் புறப்படு !

மண்ணால் விண்ணைத் தொட
உன்னால்தான் முடியும் ! — மனக்
கண்ணில் கனவுகளைக் களைந்துவிடு !

---

ஆரூர் அன்னைதாசன்,
திரு. வி க. நகர்,
புலிவலம்-610 109 திருவாரூர்.

## ஞானம்!

போதிமரத் தடியினிலே
புத்தனுக்கு ஞானம் – அவன்
போதித் ததையுணர்ந்த
பக்தனுக்கும் ஞானம்;
ஆதிமுதல் அந்தம்வரை
அறிவதுவே ஞானம்! – ஒரு
நாதியில்லா மாந்தனுக்கு!
நாணயமே ஞானம்!

சோதிவடி வானவனைத்
தொழுவதுமோர் ஞானம்
வேதமுதல் வோனிடத்தை
விழைவதுமோர் ஞானம்!
சாதிமத பேதமில்லா
சமத்துவமோர் ஞானம்
சாதல்வந்த வேளையிலும்
சகிப்பதுமோர் ஞானம்!

சார்ந்தஒரு பெண்ணிடத்தில்
சால்புறல்ஓர் ஞானம்
சோர்ந்தஉயிர் பிரிந்தபின்னே
சூழ்வதுமோர் ஞானம்!
தேர்ந்தஒரு வழியினிலே
திளைப்பதுமோர் ஞானம்
ஊர்ந்தஉடல் ஒய்ந்தபின்னே
உறுவதுமோர் ஞானம்!

மலர்தாசன்,
1, தர்கா வீதி, ஈரோடு-638005

# உரிமை முழக்கம்!

அடைந்த விடுதலை ஆண்டுகள் நாற்பதை
அழைத்து நடைபோடும் நாட்டிலே – இன்னும்
அடிமை ஒழிந்திடும் வழிகள் இல்லையே
ஆக்கம் என்னவோ ஏட்டிலே!

தன்னலம் கொண்டு பொதுநலம் விண்ட
தனியொரு மாந்தன் செயலால் – புது
நன்மைகள் விழுந்து ஊழல்கள் எழுந்து
நாளும் வீசுதே புயலாய்!

'தனியொரு வனுக்கு உணவில்லை என்றால்...இங்கு
சகத்தினை அழிப்போம்' என்றான்! – அதை
இனியேனும் இங்குச் செயலுக்குக் கொணர்ந்திட
இயங்கிடு வார்களும் இல்லை!

வாட்டி வைத்திடும் வறுமைக் கொடுமையே
வாழ்வைப் புடைத்திடும் போது – இந்த
நாட்டில் பூத்த புரட்சிப் பூக்கள்
அமைதி பெறுவதும் ஏது!

அடிமை விலங்குகள் ஒடியும் வரையிலும்
ஆணவம் ஒழிவதும் இல்லை – உயிர்
முடியும் வரையிலும் உரிமை முழக்கம்
முடியப் போவதும் இல்லை!

ஆ. வெள்ளையன், C 2, 395 F,
பெல் நகரியம், கைலாசபுரம், திருச்சி-14.

# எங்கோ ஒரு விடியல் !

வார்த்தைக்குத் தவமிருந்து
வாழ்வினைத் தவறவிட்ட
வான்புகழ் கவிஞர்களே...
காலமெலாம் காதலையே
கவியாக்கி களித்திட்டீர் !
விளைவினைப் பாராது
விடியலைக் கண்டிடவே
விருப்பொடு எழுங்கள் !
உரசிப்பார்த்த தீக்குச்சி
ஊரைமட்டுமே எரிக்கும் !
உணர்ச்சி கொண்ட
உம்உயிர்க் கவிதை
புரட்சித்தீ வெடிக்க
புதுப்பரணி பாடட்டும் !
அனல்பரக்கும் வார்த்தைகளால்
அக்கிரமத்தைச் சாடுங்கள் !
வியர்வைச் சிறப்பினுக்கு
விருத்தப்பா பாடுங்கள் !
எங்கோ ஒரு விடியலை
ஏந்திப் பாட வேண்டாம்
சமுதாயச் சாக்கடையை
சந்தனத்தால் மறைக்காமல்
புதிதாக ஓர் உலகம்
புலர்ந்திடவே கவிவரைவீர் !

சு. கிருட்டிணமூர்த்தி (தமிழாசிரியர்)
இரா. செ. உ. பள்ளி, நற்சாந்துப்பட்டி.

# மந்திர ஈக்கள் !

சோலையெலாம் மலர்ந்திருக்கும்
சுந்தரப் பூக்கள் — அதைச்
சுற்றிவந்து அலங்கரிக்கும்
மந்திர ஈக்கள் !

மாலையென்ப தென்னஅது
மன்மதக் காற்றாம் — அந்த
மயக்கந்தான் இதயங்கட்குச்
சொர்க்கத்தின் ஊற்றாம் !

வாழும்வரை மலர்கள்கூட
வாச மளிக்கும் — இவை
வாடும்வரை மனிதருக்கு
நேச மளிக்கும் !

ஏற்றத்தாழ்வு என்னும்கெட்ட
எண்ண மின்றியே — அவை
எல்லோருக்கும் இன்பந்தரும்
வாழ்வில் ஒன்றியே !

வாடுகின்ற மானிடரைத்
தூக்கி உயர்த்தும் — தூய
வள்ளல்களை வையகமே
வாழ்த்தி வணங்கும் !

மந்தகாச வாழ்க்கையிலே
நாளு மிருப்பார் — பெற்ற
மக்களுக்குச் சேர்த்துவைத்துக்
கால மழிப்பார் !

அ. அழகப்பன், அம்பேத்கர் நகர்,
குழிபிறை, புதுக்கோட்டை மாவட்டம்.

கோ. அ. மாரிமுத்து காவிரி

# வாய்மையே கொல்லும் ?...

பேய்தனக்குத் துணைபோன கைகேயி தானே
பெற்றிருந்த வரங்களினால் கணவனுடல் தன்னைத்
தீய்தனக்குத் தந்தகதை கேட்டபின்னே நாங்கள்
சிங்கார மனைவியர்க்கும் வாக்களிக்க மறுத்தோம்!
வாய்தனக்குப் பூட்டிட்டோம், சுற்றத்தார் மெச்ச
'வாயில்லாப் பூச்சி'யெனப் பெயரெடுத்தோம்
- குரைக்கும்
நாய்தனக்கு வாலினிலே நல்லதொரு கோணல்
நாறுமெங்கள் மனக்கோணல் நானூறும் மறைத்தோம்!
மந்திரமாய்த் தந்தைசொல்லை நம்பியதால் இராமன்
வனங்களிலே நொந்தகதை கேட்டபின்னே நாங்கள்
எந்திரமாய் மாறிவிட்டோம், எங்கள்தந் தையர்
எத்தனைதான் சொன்னாலும் காதிரண்டும் மூடித்
தந்திரமாய்த் தலையசைத்தோம்! இலாபம்வரும் திசையில்
சாய்ந்துவந்தோம், யாருக்கும் சிக்காமல் நாளும்
அந்தரமாய்த் தொங்கிவந்தோம், அனைவரையும்
ஏய்த்தோம்!
நடுநிலைமைக் காரர்கள் எனப்பெயரும் எடுத்தோம்!
அரிச்சந்திரன் பட்டகதை கேட்டபின்னே நாங்கள்
அனைவருமே சத்தியத்தை வெறுத்துவிட்டோம்;
வாயால்
நரிச்சந்த மொழிகளிலே நயமாகப் பேசி
நாணாமல் பொய்வலைகள் விரித்துவந்தோம்! மற்றும்
தெருச்சந்தி முனைகளிலே தீரர்போல் நடித்தோம்!
திரைவிரித்தே பொய்மனத்தை மறைத்துவைத்தோம்,
வாய்மைக்கு
உருத்தந்த காந்திமட்டும் அரிச்சந்திரன் வாழ்வை
உண்மையென நம்பியதால் குண்டடியால் மாண்டார்!

புலவர் கோ. அ. மாரிமுத்து, 43, புதுத்தெரு,
அயன்புரம், சென்னை-600 023.

# கற்புத் தாமரை !

நான்:

பேராளன் உளம்போல உயர்வு கொண்ட
  பெருமலையின் முகட்டினிலே வந்தே எட்டி
யாரையோ காணவந்த கதிரைக் கண்டே
  எழிலரசி தாமரையே ஏன்சி ரித்தாய் ?

தாமரை :

என்னைத்தான் காணத்தான் என்னத் தான்தான்
  என்றுந்தான் வருகின்றார் நான்சி ரித்தேன்
விண்ணைத்தான் நீந்திவரும் மதியைக் கண்டு
  விழியைத்தான் வாயைத்தான் திறந்தே னா...நான் ?

நான் :

தென்பொதிகைச் சந்தனத்தைப் பூசி வந்த
  திண்மைமிகு பெண்கள்தன் கூந்தல் மேயும்
வண்டினத்தை ஓட்டிமணம் சுமந்து வந்த
  தென்றலவன் கண்டேன்நீ ஆடு கின்றாய் ?

தாமரை :

பன்னாளாய்ப் பிரிந்திருந்த அண்ணன் கண்டு
  பாசத்தால் ஆடுகின்ற தங்கை யானேன்
நின்றிடவே கால்படைத்தேன் நடக்க காலை
  நிமலனவன் படைத்திருந்தால் அறைந்தி ருப்பேன் !

நான் !

வாய்கிழியப் பேசுகின்றாய் பறந்து வந்து
வண்டினங்கள் வாய்வைத்தே ஊது முதும்
போயொருத்தி வாய்கேட்க வேண்டுங் கொல்லோ
போதுமேயுன் பொய்வேடம் போதும் போதும்!

தாமரை :

சுற்றத்தார் மனைவந்தால் இல்ல றத்தார்
சுவையான அமுதளித்தல் அறமே அன்றோ!
சுற்றுகின்ற வண்டுக்குத் தேன்ப டைத்தேன்
சூழ்கின்ற பழியதனைக் கொண்டே னந்தோ!

நான்: (எனக்குள்)

கண்ணீரை விட்டழுவார் தமக்கு வாழ்வில்
காலங்கள் கைகொடுக்கும் என்ப துண்மை
கண்ணீரை விட்டழுத தாலே பொய்கை
நீநயரத் தாமைரதான் உயர்ந்த தம்மா !

சந்தக்கவி பி.கோ. கோவிந்தராசன், எம்.ஏ ,எம்.எட்.,
44, தேரடி வீதி, வேட்டவலம் - 606 753

# வேற்றுமைகள் !

ஆண்பால் பெண்பால் உண்டு – அட,
ஆயிரம் சாதிகள் கொண்டு !
மாண்புற யாவரும் ஒன்று – என
மகிழ்வுறும் காலமும் என்று ?

பள்ளியில் பாடம் படிப்பார் – சிலர்
படிப்பது போலவும் நடிப்பார் !
கள்ளம் பலவும் புரிவார் – திரைக்
கதைகள் பேசியும் திரிவார் !

தாழை மரத்தில் முள்உண்டு – அந்தத்
தாழம் பூவுக்கும் மணம்உண்டு
பாலை வனத்துப் பேரிச்சம்
பழங்களில் நமக்கு விருப்புண்டு !

சாக்கடை என்றால் வெறுப்புண்டு – அதில்
சகதி யான உரம்உண்டு !
பூக்கடை அதன்மேல் தானுண்டு – மண்
புழுதிக்குக் கூட விலையுண்டு !

தரணியில் தாய்மை மாண்புண்டு – அந்தத்
தகைமைக்கு என்றும் மணம்உண்டு !
அரசவாழ்க்கை வாழ்பவர் உண்டு – ஏழ்மை
அணைத்திட நைந்திடு வோர்உண்டு !

நண்பர்கள் நாட்டில் பலர்உண்டு – அதில்
நாணய மற்ற பேர்களும்உண்டு !
தண்மை தழுவும் தென்றலும் உண்டு
தாய்போல் உதவிடு வோர்களும்உண்டு !

பொன். சுப்பையா, தொலைபேசி
செவலூர், குழிபிறை, புதுக்கோட்டை மாவட்டம்.

தொ. பெ. கருப்பண்ணன் 

# பூக்காடாய் வாழ்ந்து விடு !

அன்றுநீ வாழ்ந்ததை மறந்தாய் – அட
அகிலமே அறியும் உன்பெருமை !
அன்பே யில்லாப் பாவியரும் – கொடும்
அரக்கர் கூட்டக் கயவர்களும்

தரணியே போற்றும் தமிழ்நெறியை – அட
தகர்த்தே அழிக்க முயலுகின்றார் !
வந்தாரை எல்லாம் வாழவைக்கும் – நம்
வளமிகு செந்தமிழ் நாட்டினிலே

சொந்த இனத்திற்குச் சோறில்லை – ஒரு
துளியும் இரத்தத்தில் வீரில்லை !
தமிழுக்கு அமுதென்று பெயரன்றோ – நம்
தமிழர்க்கு அதுவே உயிரன்றோ !

விண்முட்டும் பெருமைக் குணம்மறந்து – அட
விழுந்தாயே மாற்றான் அடிகளிலே !
தெருவெங்கும் பள்ளிகள் அமைப்போம் – இனி
தேமது ரத்தமிழ் தருவோம் !

பட்டங்கள் பெற்றால் போதாது – தமிழ்ப்
பயனை இழந்தால் உயர்வேது ?
இதுதான் ஆன்றோர் உண்மையே – அதை
இனியேனும் உணர்வது திண்மையே !

புரட்சிக்கு வித்தாக ஊன்றிவிடு
புதுமைக்கு நீஇன்றே மாறிவிடு
கயமையை அழித்திட முயன்றுவிடு
கலைதவழும் பூக்காடாய் வாழ்ந்துவிடு !

# நாளைய உலகம் நாடிடும் உன்னை !

ஆதவன் வருவதும் அகிலம் விழிக்கவே
அந்தியில் மறைவதும் அமைதியைக் கொடுக்கவே
செங்கோல் வளைந்தால் செழுமை குறையுமே
செந்நெல் விளைவும் சிதைந்தே மறையுமே !

குளிர்தாங்கி குடையாய் குவிந்திடும் நாய்க்குடை
மண்ணில் நிலையாய் மருவாது மாய்ந்திடும்
அதுபோல் வாழ்வில் ஆவதும் அழிவதும்
பொதுவாய் அறிந்தும் புரிந்துகொள் ளாரே !

உள்ளவர் வாழ்வில் உறுசுவை பெருகும்
இல்லா தவர்க்கு இதயம் கருகும்
தனியொரு மாந்தனின் தணல்பசி போக்கிட
தானியார் கொடுமையைத் தகர்த்திட வேண்டும்!

சமரச வாழ்வெங்கும் தழைத்திட வேண்டின்
சமுதாயப் புரட்சி வெடித்திட வேண்டும் !
சினத்தை அழிக்காத விலங்குகள் உண்டு
இனத்தையே அழிக்கும் மாந்தரும் உண்டு !

தித்திக்கும் முக்கனி தீஞ்சுவைத் தமிழாம்
எத்தனை பெரியோர் எடுத்துச் சொல்லியும்
என்னருந் தமிழா ஏனிந்த இழிநிலை !
இன்றே துணிவாய் ஏற்றுநீ நடப்பாய் !

நளைய உலகம் நாடிடும் உன்னை !
காளைபோல் வீரம் கனன்றெழு வாயே !

---

தொ. பெ. கருப்பண்ணன்,
செவலூர் அஞ்சல், குழிபிறை, புதுக்கோட்டை மாவட்டம்

# ஏழை வீணைகளின் புலம்பல்கள் !

இமயத்து நெற்றியில் ஏற்பட்ட சுருக்கங்கள்
வயிற்றுக் கங்கையில் புறப்பட்ட
எச்சில் நீரோட்டங்கள் !

வயிற்று உளைச்சல்களின்
வாடிக்கைத் திருநாள் — சிரிப்புகள்
மட்டுமே மத்தாப்புகளாகச் சிதறுகின்றன !
சிந்தனைகளோ எரிமலையாய்ச் சீறுகின்றன !

நிந்தனைகளை எங்களுக்கு வழங்கிவிட்டு .....
பசிநீக்கும் அமுதசுரபிகள்
எங்கோ ஒழிந்துகொண்டன ..

விலா எலும்புகளை வீணை நரம்புகளாக
எண்ணி மீட்டினேன், ராகம் வரவில்லை
மீண்டும் விழா எலும்புகளாய் ஒட்டிக்கொண்டன.

ஒடிந்து போன தேக்கு மரங்களே !
உயிர்வாழ முடியாவிட்டாலும் உன்னத
வீணையாகுங்கள் மீட்டட்டும்
இனிய சுரங்களாய் !

இசைத்துக் கொண்டே இருங்கள்
இன்னொரு தலைமுறையிலாவது
முடிவு இல்லாமலா போய்விடும் !?!?

அ. செல்வராசு, எம். ஏ,
39, புதுக்குடியிருப்பு, தியாகேசர் ஆலை, மணப்பாறை.

# உன்மத்தன் !

''அது
வழுக்கலான பாதையென்று – இயற்கை
வழங்கிய பாதைக்கே
வாருங்கள்'' என்று
வழக்குத் தொடுத்திட்டேன் !

சாதிமத பேதமே
இல்லையென்று சாதித்தேன் !
பகுத்தறிவு வேண்டுமென்று
பலருக்கும் எடுத்துரைத்தேன் !

கடவுளின் பெயரால்
காவு கொடுக்காதே
என்று தடுத்தேன் !

மனிதன் மதுவுக்கு
அடிமை ஆகலாமோ !
மாநிலத்தில் மதிப்பாரோ
என்றுதான் எழுதினேன் !

ஆனால், மக்கள் எனக்கு
உன்மத்தனென்று
உரைவகுத்தாரே !

எஸ். ஆர். தங்கராசு, சாமிநாதபுரம்
வடுகபட்டி - அஞ்சல், அரச்சலூர் - 638 101.

# தயங்காதே !
# தள்ளாதே ! !

அறிவுள்ள மாந்தன் என்னும் பெயரை
அடைந்திடத் தயங்காதே – எதிலும்
திறமை யாளன் என்றே பலரும்
போற்றிட மயங்காதே !

வறிய வாழ்வை வாழ்ந்திட்ட போதும்
வழங்கிடத் தயங்காதே – நல்ல
நெறிதனை மறந்து நிலையது புரண்டு
நேர்மையைத் தள்ளாதே !

குறியாய் நல்ல கொள்கையைப் பூண்டு
குணத்தில் பிறழாதே ! – எதற்கும்
வெறிதான் கொண்டு வீணே மனத்தில்
வேதனை கொள்ளாதே !

உள்ளத்தில் ஊறிடும் உயர்வுறு கருத்தை
உரைத்திடத் தயங்காதே ! – கால
வெள்ளத்தில் நின்புகழ் நிலைத்திட மூத்தோர்
விளக்கத்தைத் தள்ளாதே !

எம். அழகர்சாமி,
அஞ்சூர்-அஞ்சல், கொடுமுடி-வழி, பெரியார் மாவட்டம்

# சேர்ந்து வாருங்கள் இளைஞர்களே !

இளைஞர்களே! இளைஞர்களே! ஒன்று கூடுங்கள்!— நம்
இந்தியாவை உயர்த்தவேண்டும் சிந்து பாடுங்கள் !
இளைஞர்களே! இளைஞர்களே! சேர்ந்து வாருங்கள்!—நம்
இளையபா ரதம்உயர திறமை தாருங்கள் !
(இளைஞர்களே !. .

இமயம்முதல் குமரிவரை இளமை ரத்தங்கள்.
இணைந்துவந்தால் ஓய்ந்திடாதோ கடலின் சத்தங்கள் !
குவியுமிளந் தோழர்கண்டு மேகக் கூட்டங்கள்,
கூடிமழை பொழியவளங் கொழிக்கும் தோட்டங்கள் !
(இளைஞர்களே ! . .

பாய்ந்துவரும் இளநதியைப் பகைமை கண்டுதான்,
ஓடியொளிந்து அழிந்துபோகும் பயமும் கொண்டுதான்!
தேய்ந்துபோன இளமதியும் இளமை கண்டுதான்
தேறொளியைத் தான்பொலியும் முழுமை கொண்டுதான்!
(இளைஞர்களே !. . .

அன்றைக்கும் 'இந்தியா' தான் அழகுவாய்ந்தது !
ஆன்றோர்கள் சான்றோர்கள் நிறைந்திருந்தது !
இன்றைக்கும் அறியாமை இருளை வைப்பதோ? — அது
இதயத்தில் முள்ளாக நம்மைத் தைப்பதோ?
(இளைஞர்களே !. . .

சுயநலத்தை ஒழிப்போம்! பொதுநலத்தை வளர்ப்போம்!
ஊருயர உரிமைகளை விட்டுக் கொடுப்போம் !
அறியாமை துறப்போம்! அறிவுக்கண்ணைத் திறப்போம்!
அன்பாலே ஒன்றுகூடி அறவழியில் நடப்போம் !
(இளைஞர்களே !. .

# சிறந்திடுக தாய்நாடே !

ஒப்பில்லாச் சமுதாயம் உலகிற்கோர் புதுமையெனச்
செப்புகிற வார்த்தையதே சிந்தையிலே சிலிர்ப்புதரும் !
இப்புவியில் இன்றேநாம் இயன்றவரை இனிதுழைத்து
அப்படியோர் பாரதத்தை அமைத்திடவே சூளுரைப்போம்!

வேற்றுமையில் ஒற்றுமையாய் விளங்குகிற நாடென்று
போற்றப்படும் பாரதத்தின் புத்திரராம் நாமெல்லாம்
உடல்.பொருள். ஆவியொடு உறவின்பம் இழந்துமுன்னோர்
கொடுத்திட்ட சுதந்திரத்தைக் குப்பையிலே போட்டு
விட்டோம் !

நாடேநம் வீடேபோல்; நாமெல்லாம் ஓரினமே !
கோடிப் பிரிவுகளா, குடும்பமிது ஒன்றினுக்குள் ?
நமதுழைப்பால் பிறர்வாழ்ந்த நற்காலம் இன்றெங்கே?
சுமையாகப் பிறர்உழைப்பால் சுகங்காணல் ஏனிங்கே?

பகையாளி சொற்கேட்டுப் பங்கிடவோ நமைநாமே?
நகையாதோ நல்லுலகம் நமக்கெதிரி நாமானால்?
சிந்திப்போம் நல்லவையே; செயல்படுவோம் நேர்வழியில்
சந்திப்போம் சரிவில்லாச் சமத்துவச் சமுதாயம் !

நாளை என்பது கேலிப் பொருளாம்
நமதுழைப் பினைநாம் நாட்டிற் களிக்க
வேளை இதுவென விரைந்து முயல்வோம் !
வெளிநாட் டுயர்வின் விந்தைகள் பயில்வோம்!
அன்பும் அறமும் அதன்வழிச் செயலும்
இன்பம் தருவன; இதையாம் மறவோம் !

மதம், இனம், மொழியால் மாறுபட் டிருப்பினும்
நிதம்நாம் தொழுதிடும் நிலத்தாய் ஒருத்தியே !
உள்ள வளத்தால் உற்றவை சமைப்போம் !
வல்லர சாய்இதை வையத்தில் அமைப்போம் ! !

## ....நான் ..

கானலை நீரென் றெண்ணிக்
கபடரை உறவென் றெண்ணி
நானலைந் திட்டேன் வீணே
நானிலந் தன்னில்; பேச்சிற்
தேனலை வீச, நெஞ்சிற்
தேக்குவார் வஞ்சம்; கண்டும்
ஏனலை கின்ற திங்கே
என்னுளம் உறவு தேடி ?

கூடவே இருந்தார், பின்னர்
குழிகளும் பறித்தார்; மேன்மை
நாடவே செய்தார், தாமே
நாயென இகழ்ந்தார்; பாக்கள்
பாடவே செய்தார், அன்னார்
பரிகசித் திட்டார்; இன்று
தேடவே வைத்தார், மூடர்
தெருவினில் என்னை நானே !

பணமெனும் பாவ மென்றன்
பையிலே உள்ள தென்னும்
எணமொடு என்பு தோலாய்
என்னுடன் உலவி நின்றார்
குணமன்றி வேறு செல்வம்
கொளவிலை என்ற றிந்து,
பிணமென எனைவி டுத்துப்
போனதை என்ன சொல்வேன் ?

கண்களாம் வலைவி ரித்துக்
காளைஎன் உளம்பி டித்துப்
பண்களாய்ப் பாட விட்டாள்;
பரவச மூட்டி விட்டாள்;
உண்க(ள்)ளாய் உடனி ருந்தாள்;
ஊர்,பழி யுரைக்கக் கேட்டுப்
புண்களாய் மாறி விட்டாள்;
பொறுக்குமோ இந்த நெஞ்சம்?

கானிடை வாழ்வி லங்கு,
கவின்மிகு புள்ளி னங்கள்
தானிடை கொள்வ தில்லை,
தரணியில் கேடு மிக்க
மானிட வர்க்கம் போன்று
மாபழி, வஞ்சம், சூது,
தேனிடை நஞ்சு போலத்
தீயதுர்க் குணங்க ளெல்லாம் !

நீண்டநாள் வாழ்ந்து, வீணே
நெடுமர மாக வீழ்ந்து
மாண்டிடும் பொய்மை வாழ்வென்
மனமுமேற் காது ! நல்ல
தூண்டுகோல் போலி ருந்து,
தூயநற் கவிப டைத்து
மீண்டிடும் சிறிய வாழ்வும்
மிகசிறப் புற்ற தாகும் !

இன்முகம் நேரில் காட்டி,
இழிமுகம் மனதில் நாட்டும்
அன்பர்காள்! 'இந்தப் பாவி
அழிந்திட வேண்டும்' என்னும்
நண்பராம் பகைவ ரே!நீர்
நாட்டிடும் தடைகள் வீழ்த்திப்
பண்புடன் என்றன் வீரப்
'பா'நடை தொடரும் கண்டீர்!

## வாழ்க்கைப் புத்தகம் .

விடிந்தது காலை! வெய்யவன் வரவால்
மடிந்தது காரிரா! மானுட தோழனே!
விண்ணையும் துளைக்குமுன் வீர விழிகளில்
இன்னுமா உறக்கம்? இனியனே, எழுந்துவா!

எழமன மின்றி ஏன்படுத் திட்டாய்?
நிழல்போ லுன்னை நிதமுந் தொடரும்
கடமைகள் கண்டுநீ களைப்படைந் தனையா?
மடமை எ(ண்)ணமதை மாய்த்திடு தோழா!

வறுமை வாழ்வினை வாட்டுதல் கண்டு
வெறுமை நினைவினில் வீழ்தலைத் தவிர்ப்பாய்!
இரவும் பகலும் இணைந்தது போலே
உறவும் பிரிவும் உற்றநம் வாழ்வில்

துயரமோ சுகமோ தொடர்வன வல்ல!
மயக்கமோ தெளிவோ மனத்தினைப் பொருத்தாம்!
வாழ்க்கைப் புத்தகம் வாசிப் பதற்கு
ஆழ்ந்த சிந்தனை, ஆற்றல் அவசியம்!

உடனே படித்தபி னொதுக்கி யெறிந்திட
கடைகளில் மலிவாய்க் காணும் கதையல!
அதுநம் அனுபவம் யாவும் அடங்கிய
புதுக்கலைப் பெட்டகம்! புரிவாய், தோழா!

வம்பு, வழக்கு, வஞ்சகம் விட்டே
நம்பிக் கையொடு நாளும் இருப்பாய்!
உயர்வு நிச்சயம் உண்டென் றெண்ணி
அயர்வு நீக்கிநல் லாக்கப் பணிகளில்

முழுமனத் தோடு முயன்றுழைப் பாயே,
பழிசொல் வாரிடம் பயங்கொள் ளாமல்!
இன்றைய வாழ்வின் இன்னலெண் ணாதே!
உன்றனுக் காகவோர் உயரிய வசந்தம்

காத்துள(து) அதைப்பிறர் கவர்ந்து செலுமுன்
பூத்த மனத்தொடு புறப்படு தோழா!
கரைந்து சொல்லுமே கவலையும் கடமையால்!
விரைந்துசெல் நேர்வழி, வெற்றி நிச்சயம்!

# நினைவெல்லாம் நீயே!

நீயிருக்கும் இடம்தானிந் நித்தி லத்தில்
நெஞ்சோடென் நினைவிருக்கும் இடம தாகும்!
தீயிருக்கும் காடாகும் என்ற னுக்கு,
தேவியுன்றன் திருவுருவம் உலவாச் சோலை!

சேயிருக்கும் அழுதபடி அன்னை யின்றேல்;
சேயிழையே, அதுபோல்நான், நீயு மின்றேல்!
போயிருக்கும் என்ஆவி நீவெ றுத்தால்
பொய்யுடல்தான் நடைப்பிணமாய் இங்கி ருக்கும்!

காரிரவாய் என்சிந்தை கலங்கும் போது
கண்மணியே ! வளர்மதிபோல் வந்து நீயும்
சீரியவுன் பார்வையெனும் ஒளியை வீசி
சிந்தையிலே களிப்புறச் செய்கின் றாயே !
நேரிழையே ! நிதந்தோரும் அவ்வப் போது
நேருக்கு நேர்நமது பார்வை மேகம்
போரிடுவ தோர்நொடிதான் எனினும் அற்றைப்
பொழுதெல்லாம் அந்நினைவே எனைம யக்கும் !

கதிரோனின் சம்மதத்தைக் கேட்டு விட்டா,
கமலமலர் காதலொடு மலரு கின்றாள் ?
மதியோடு கூறிவிட்டா 'அல்லி' என்னும்
மலர்மங்கை இதழ்விரிப்பாள் ? அலைக ளாடும்
நதியாளும் கரையிடத்தில் உரைத்து விட்டா
நடைபயிலு கின்றாள்? அஃ திலையே ! காதல்
புதிரான ஓரினிய உறவாம் ! மானே !
புரிவாய், என் காதலிதைப் போலத் தானே !

சிப்பியிலே ஓர்முறைதான் பிறக்கும் முத்து ;
செழுவாழைக் கோர்குலைதான் வாழ்க்கைச் சொத்து;
இப்புவியில் வானுக்கும் ஓர்நி லாத்தான் !
இறையோனும் அனைவர்க்கும் ஒருவன் தானே !
எப்படித்தான் பார்த்தாலும் காட்சி யொன்றே,
எழிலாக இருவிழிகள் இருந்திட் டாலும் !
இப்பிறப்போ டெப்பிறப்பும் என்றன் நெஞ்சில்
இருப்பவளும் இனியவள்நீ ஒருத்தி தானே !

காலங்கள் கடக்குதடி நம்மை விட்டு;
காட்சிகளும் மாறுதடி; பருவம் தந்த
கோலங்கள் மாறுதடி; உறவும் மாறிக்
கொள்ளுதடி பகைதனையே! வாழ்விற் கொண்ட
சீலங்கள் சிதையுதடி! கூந்தற் றம்மிற்
சிறுநரையும் தோனுதடி! நமக்குள் அன்புப்
பாலங்கள் நான்கட்டி வைத்தேன்; வந்து
பார், இன்னும் அவைபுதிதாய் இருக்கு தம்மா!

ஊரிலுள பாவியர்கள் உரைத்தல் மட்டும்
உண்மையெனத் தானினைந்தாய் போலும்; என்றன்
பேரினிலே உன்றனுக்கு அளவில் லாத
பெருங்கோபம் வந்ததுவோ? மதியே! உன்றன்
சீரிளமை கண்டா, நான் நேசம் வைத்தேன்!
சிந்தையிலே உனைவைத்துப் பூசை செய்தேன்!
பாரினிலே உனைப்பார்த்துச் சிரித்த தன்றி
பாவங்கள் வேறேதும் செய்தே னில்லை!

# உழைக்கும் தோழா!

உழைக்கும் தோழா, ஒருகணம் நிமிர்ந்துவா,
உரிமைக் காகக் குரல்கொடுப்போம்! – ஏய்த்துப்
பிழைக்கும் வர்க்கம் பிழைக்கா திருக்க
பிழையற்ற வழியில் போர்தொடுப்போம்!

பகலா இரவா பாரா துழைப்பவை
பலம்கொண்ட உன்கைகள் – அதன்
பலனால் முழுதும் பணமாய் நிறைவது
பாவியர் அவர் பைகள்!

மாடிக்கு மேலே மாடிகள் கட்டும்உன்
மனதினில் தான் வாட்டம்! – அதில்
கோடிக்கு மேலே கோடிகள் சுருட்டிக்
கூத்திடும் ஓர் கூட்டம்!

உழைத்திடும் வர்க்கம் ஒன்றுபட் டெழுந்தால்
உயரிம யந்தான் சிறுகுன்றாம்! – வளம்
கொழித்திடும்; மக்களின் குறைகளும் தீருமே
கொள்கஇக் கொள்கை தான் நன்றாம்!

## சமாதானப் புறாக்கள்!

இதோ, இந்தப் புறாக்கள்
வேடனின் குறிக்குத் தப்பி
வானில், நீந்திவரும் புறாக்களல்ல....
சமாதான மடல்களை
ஏந்திவரும் புறாக்கள்!

ஆனால் அவற்றின் கழுத்தில் தொங்குவது
நேசக்கடிதங் களல்ல;
நெருப்புக் குண்டுகள்!

'மானிடவர்க்கமே தங்களின்
மரணப்பிடிக்குள்' என்று
மார்தட்டிக் கொள்ளும் வல்லரசுகளுக்குள்
அணுஆயுத ஒப்பந்தம் அமுலாகும்போதே,
'நியூட்ரான் குண்டு'ச் சோதனைகள்
நிறைவேறிக் கொண்டுள்ளன.

பத்திரிகை களிலெல்லாம் அவர்கள் சந்திப்பு
பட்டை எழுத்துக்களில்
பாராட்டுப்படும் வேளையில்,
அவர்களோ, தங்களின்
முறிந்துபோன பேச்சுவார்த்தைக்கு
முன்னுரை எழுதிக் கொண்டிருக்கிறார்கள்.

நம்முடன் உறவு கொள்ள
யோக்கியமற்ற பாகிஸ்தான்காரனுக்கு
'சார்க்' மாநாட்டில்
சமபந்தி விருந்தளித்தும்.

ஜெய்ப்பூரில் கிரிக்கெட் பார்க்க
குண்டுதுளைக்காத மேடைதந்தும்
குதூகலிக்கச் செய்கிறோம் !

ஆனல், அந்தப் பாகிஸ்தானில் பயிற்சிபெற்ற
'காலிஸ்தான்' சுயவர்களால்
பாதுகாப்பில்லாத பஞ்சாபிலே
நம்மவர்களோ நாளும்
பட்டப்பகலிலேயே
சுட்டுக்கொல்லப் படுகிறார்கள் !

இத்தனை நாட்களாய்,
இரக்கமற்ற சிங்களரால்,
இலங்கையிலே இன்னற்பட்ட
நம் இனத்திற்கு
விடுதலை அளிக்கப்போன நம்வீரப்படையே
விலங்கைப் பூட்டுகிறது !

அடைக்கப் படவேண்டியவர்களின்
ஆணைக்குக் கட்டுப்பட்டு,
பாதுகாக்கப் படவேண்டியவர்களையே
பழிவாங்கிக் கொண்டிருக்கிறது,
பாரதம் !

புலிகளுக்குப் புதைகுழியும்
(சிங்கள) ஓநாய்களுக்கு உயர்பதவியும்
தந்துவிட்டுத்தான் இந்தியா
தாயகம் திரும்பும் போலும் !

இன்று, அரசியலிலும், ஆன்மிகத்திலும்
போலிகளே பொறுப்பு வகிக்கிறார்கள் !

கெட்டுப்போய்விட்ட கிராமங்களின்
விசாரணைக் கூட்டங்களில்கூட
மடிந்துபோய்விட்டது மனிதாபிமானம்.

சத்தியமும் வாய்மையும்
சக்தியற்றுப் போய்விட்டன.

அகிம்சையும் இன்று
அநாதையாகி விட்டது.

நீதியும் நேர்மையும்
செல்வாக்குப் பெற்றவர்களின்
சொல்வாக்குப் படிநடக்க
அதிகாரத்தின் பிடியிலே
அடகுவைக்கப் பட்டிருக்கின்றன.

திறமையும் அறிவும்
தெருச்சரக்காகி விட்டன !

'பொதுநலவாதி' என்னும்
போர்வைக்குள் இருந்துகொண்டு
சுரண்டுகின்ற சுயநலவாதிகளால்
அமைதிப் பூங்காவான
தமிழகத்திலின்று
தினமொருபக்கம்
தீபாவளிச் சத்தம் !

வருங்காலத்தை காக்கவேண்டிய
வாலிபங்களோ,
மலிவாய்க் கிடைக்கும்
'மஞ்சள்' பத்திரிகை களாலும்
பள்ளியறை காட்சிகளைப்
பச்சையாகக் காட்டுகிற
வெள்ளித் திரைகளாலும்
உளமும் உடலும் கெட்டு,
இளமையிலே முதுமை தட்டி....
எதிர்காலமே புதிராகி..
பாதைமாறிப் பயணம் போகிறார்கள் ! ...

வேர்விட்டு வளர்ந்துவிட்ட – இந்த
வெங்கொடுமைக் கெல்லாம்
விடிவே கிடையாதா ?
நிச்சய முண்டு!. .எப்படி? .

மூலைக்கு ஒன்றாகச் சிதறிக்கிடக்கும்
முயற்சி நிறைந்த
ஒழுக்கமுள்ள வாலிப இதயங்களின்
ஒட்டுமொத்த எழுச்சி
உதயமாகும் போது,

இந்த – இழிவுகளுக்கெல்லாம்
அழிவு நேரும் !

இருண்டுபோன சமுதாயத்திற்கு
வெளிச்சமான 'விடிவு' வரும் !

அப்போதும் இந்தப் புறாக்களின் கழுத்திலே
...குண்டுகள் இருக்கும்...
ஆனால் அவை,
அழிவுதரும் அணுகுண்டாய் இருக்கா !
அன்பை வளர்க்கும்
கற்கண்டுகளாய் இருக்கும் ! இனிக்கும் !!

# பெறுவோம், புது வாழ்வு.

புதுவாழ்வு பெறவேண்டும்; இந்த மண்ணிற்
புரையோடிப் போயிருக்கும் பழமை கொண்ட
இதுவாழ்வு ஆகாது ! இதில்ஏ ராளம்
இருக்கிறது பெரும்பள்ளம் ! அவ்வா றானால்,
புதுவாழ்வு எதுவாகும்? 'எல்லோ ருக்கும்
பொது' எல்லாம்; எனும்புரட்சி எண்ணம் மிக்க
'பொதுவாழ்வே' புதுவாழ்வாம் ! அந்த வாழ்வைப்
பெறுவதற்கே புரட்சிதனைச் செய்வோம் நாமும் !

வரதட்சனைக் கொடுமை யாலே பெண்கள்
வாடுகின்றார்; ஆண்மையிலா மாப்பிள் ளைக்குத்
தர,தட்சனை யில்லாத் தந்தை மார்கள்
தவிக்கின்றார்; மேலுமிவண் பழமை நோயாற்
புரையோடிப் போயிருக்கும் சாதிச் சண்டை
போய்த்தொலைந்த பாடில்லை; நெஞ்சி லித்தக்
கரைகழுவல் வேண்டுமெனப் பாரதி யாரும்,
கவிப்புரட்சி செய்தவர்பா வேந்த னாரும்

மற்றுமுள்ள பெரியோரும் பாடிக் கூட
மதப்புண்ணும் நமைவிட்டு ஆற வில்லை!
கற்றகல்வி நல்வாழ்வை நல்க வில்லை;
கட்டங்கள் படுகின்றார் பட்டம் பெற்றோர்!
மற்றவரின் தவறாலே ஆவாள் கைம்பெண்;
மறுமணத்தை அவள்கொள்ளல் ஏற்பா ரில்லை!
பற்றில்லை பிறநாட்டார் மீதில்; இந்தப்
பாரினிலே எல்லோரும் ஒன்றே யன்றோ!

போர்தனையே நாடுகிற மனிதப் பேயர்,
பொல்லாத இரத்தவெறிப் பிரிய ரெல்லாம்
மாறிவிட வேண்டுமிவண்; இயற்கை யான
மரணம்தான் வரல் வேண்டும்! வறுமை, வாட்டம்
யாருக்கும் இருக்கக்கூ டாது, (உ)ழைப்போர்
யாவர்க்கும் உழைப்புநிகர் ஊதி யத்தைச்
சீராகத் தரல்வேண்டும்; உ(ள்)ளவ ளத்தைச்
சமமாகப் பங்கிட்டுக் கொள்ளல் வேண்டும்!

சாதிமதச் சாக்காட்டை ஒழித்தல் வேண்டும்;
சத்தியத்தின் வழிநோக்கிச் செல்லல் வேண்டும்;
காதலுடை கலப்புமணம் கொள்ளல் வேண்டும்;
கைம்பெண்கள் மறுவாழ்வு பெறுதல் வேண்டும்
வேதனையில், படித்தவர்கள் வீழ்தல் நீக்க
வேலைதரத் தொழில்விரிவை யாக்கல் வேண்டும்!
ஆதலினால் புரட்சிதனைச் செய்து ஈங்கே
அழிவில்லாப் புதுவாழ்வைப் பெற்றின் புறுவோம்!

செ. அரசப்பன் (தீரன் அரசு)
லிங்கத்தூர், உப்பிடமங்கலம்-அஞ்சல்,
கரூர் வட்டம், திருச்சி மாவட்டம். 639 127

சு. இராதாகிருட்டிணன் காவிரி

# இளைஞரின் சாட்டையே பேசட்டும் !

மயக்கம் கொண்ட மனிதனின் வரவுக்கு
மயானக் கரைதான் அழுதிடுமாம் !
தயக்கம் என்பது வெற்றியைத் தடுத்திடும்
தடைகள் என்னும் விழுதுகளாம் !
பயத்தைச் சுமக்கும் இளைஞரின் முதுகில்
பார்க்கலாம் கூனென்ற பழுதுகளாம் !
இயக்கம் நடத்தியே கூனை நிமிர்த்திட
இளைஞரின் சாட்டையே பேசட்டும் !

நாற்றச்சாதிச் சாக்கடை தோறும்
நச்சுப் புழுக்களின் ஆனந்தம் !
மாற்றம் காணா மங்கையர் வாழ்வில்
'வரதட்சணை' என்னும் பூகம்பம் !
சோற்றுக்கே அலையும் ஏழையின் நிலைமை
சூழ்ந்து வருத்தும் ஆதங்கம் !
ஏற்றம் விளைய உரிமை கேட்க
இளைஞரின் சாட்டையே பேசட்டும் !

பாலை வனத்து வாழ்க்கை முழுதும்
பசுமைச் சோலை ஆகட்டும் !
சாலை வழியில் வருகின்ற இடர்கள்
சந்திக் காமலே போகட்டும் !
காளயர் கன்னியர் உள்ளங்கள் ஒளியுடன்
கடமை யுணர்வையே வீசட்டும் !
நாளைய பாரினில் நீதி ரதம்வர
இளைஞரின் சாட்டையே பேசட்டும் !

# அறிவு எங்கே...

கூவத்தைப் பொன்னியென்று சொல்ல மாட்டார்
கூழாங்கல் ஒருநாளும் வைர மாகா;
சாவடைந்தோர் எத்தகைய பேரா னாலும்
சவமேதான்! பொன்னுடலம் எனப்போற் றார்கள்!
நோவடைந்த இக்காலக் குமுகா யத்தில்
நூறுநூ றாய்விரியும் குறைபா டெல்லாம்
போவதெந்த நூற்றாண்டோ ..மேன்மே லுந்தாம்
போலிகளைப் பார்க்கின்றோம்! அசலைக் காணோம்!

நதிகளே குளிப்பதற்குப் போகும் போது
நாமெல்லாம் போயெங்கே குளிப்போம்! உப்புப்
பொதிந்திட்ட கடலுக்குச் சோப்புப் போட்டுக்
குளிப்பாட்டி விடவேண்டும் தாய்மா ரெல்லாம்!
மதியோடு கதிரவனும் வான வீதி
வழிமாற்றிக் கொண்டுவர வேண்டும்! இந்நாள்
விதிமாற்றிச் சட்டத்தை இயற்றி யுள்ள
விளக்கத்தைக் கடவுளுக்குச் சொல்ல வேண்டும்!

வசந்தத்தைச் சுகந்தங்கள் தேடிப் போனால்
வசந்தங்கள் அங்கின்றி வேறோர் பக்கம்
வசந்தத்தை நாடிப்போய் உள்ள தாக
வசனித்தால் எப்படித்தான் இருக்கும்? நல்ல
வேளையாய் திரைப்படத்தைப் பார்ப்ப தற்குப்
போகாமல் இருந்ததே வியப்பு! சுண்ணச்
சூளையாய்ச் சுகந்தங்கள் போன தாலோ .
சுட்டுவிட்ட தோவசந்த வாழ்வி னுக்கே!

குளிப்பதற்கே நதியெல்லாம் போயுங் கூட
   கூவம்மட்டும் போகவில்லை என்ன கேடோ !
இளிப்பதற்கே சிலபேர்கள் பொய்ப்பல் கட்டிக்
   கொள்கின்றார் ! பிணத்துக்குச் செண்டு பூசிக்
களிக்கின்றார் ! நரைமயிரைக் கறுமை யிட்டு
   காட்டுகிறார் ! கூட்டுமுடி கூடச் சேர்த்துப்
புளிக்கின்றார் ! அதுகண்டு கூடங் கள்தான்
   புரிந்துகொள்ள வேயில்லை, என்ன கேடோ.. !

சுகந்தத்தைத் தேடிவரும் வசந்த மில்லை
   சுள்ளெறும்பைச் சர்க்கரையா நாடிச் செல்லும்?
நகம்தானாய் வளர்வதுபோல் நமக்கு நன்மை
   நண்ணிவர மாட்டாது ! பசிக்குச் சோறு
புகட்டாமல் தானாகப் பசிதீ ராது !
   புரட்சியின்றி எழுச்சியுரு வாகி டாது !
பகட்டாலும் பணத்தாலும் பதுங்கி யுள்ள
   பச்சோந்திக் கூட்டங்கள் நிறைய வுண்டே !

அமிழ்துபெறப் பாற்கடலைக் கடைவ தற்கு
   அணிவகுத்து வராவிட்டால் பரவா யில்லை !
உமிழ்கயமைக் கூவங்கள் ஒழிவ தற்கு
   உடன்செய்ய வாருங்கள் ! புதிதாய் நீங்கள்
ஆறுகளை வாய்க்காலை குளத்தை கோயில்
   கோபுரத்தைப் புதுப்பித்தல் பிறகு பார்ப்போம் !
ஊறுபட்ட உடலுக்கு நலத்தைக் காணோம்,
   உடைதைக்க அவசரம்ஏன்? அறிவு மெங்கே !

சு. இராதாகிருட்டிணன் காவிரி

# எளிமை வாழ்க்கை !

சக்ரமாய் நிற்காமல் சுழன்றே நாளும்
சடுதியாய் உழைத்திட்டுப் பொருளும் சேர்த்து
திக்கெட்டும் சீர்பரவ பெருமை கொள்ளும்
திறமையிலே நமைப்புகழ்ந்து கொண்ட போதும்
பக்குவமாய் நாம்வாழப் பழகா விட்டால்
படர்ந்திடுமே கேடுகள்தான்; பயன்தா னென்ன...
சிக்கனமாய் வாழவழி கற்றல் ஒன்றே
சிறப்பாக தமைக்காக்கும் வழியாம் இன்றே !

ஏர்முனையில் போராடும் உழவன் கூட
ஏற்றமுழ ஆடையின்றி உழைத்து நைவான் !
போர்முனையில் மோதுகின்ற மறவன் கூட
புத்திமுனை யால்பகையை செல்வ துண்டு !
கார்முகிலும் கனல்தெறிக்கும் இடியி டித்துக்
காற்றோடு காற்றாகக் கலப்பதுண்டு !
ஊர்உயர உயர்வாக உழைத்திட் டோரும்
உயிர்வாழ முடியாமல் இரப்ப துண்டே !

எளிமை வாழ்க்கை எப்படி என்றால்
எவர்க்கும் உரிமை யாக நடப்பதே !
களிப்பொடு வறுமையில் கலந்திட வேண்டும்
கடமையை உயிராய் மதித்திட வேண்டும்
புளிப்பையும் கசப்பையும் புசித்திட வேண்டும்
புதுமையும் பழமையும் போற்றிட வேண்டும்
குளித்தும் குளிக்கா திருந்திட வேண்டும்
கோவணங் கூட கட்டிட வேண்டும் !

கண்ணுக்கு மைதீட்டி அழகைக் கண்டு
கருணைதான் இல்லையெனில் அழகா அஃது?
வண்ணமிகு கோலம்முன் வாசலிலே போட்டு
வருந்துமலங் கோலம்மன வாசலுக்கு ஏனோ...!
பெண்ணுக்கு வேண்டுவது புன்னகையே யாகும்
பெறுகின்ற பேறுகளில் மகப்பேறே பேறாம்!
மண்ணுக்கு வேண்டுவது தண்மை ஒன்றே
மாந்தர்க்கு வேண்டுவது எளிமை, தூய்மை!

சிறுதுளிதான் பெருவெள்ள மாகும் என்பார்
சிறுதுரும்பும் பல்குத்த உதவும் அன்றோ.
சிறுதுளிதேன் மருந்தாகப் பிணியை நீக்கும்
சிக்கனமே விருந்தாகப் பசியைப் போக்கும்
நார்கூட காண்பதற்கு எளிதென் றாலும்
நாறுகின்ற மாலைகட்ட ஏற்ற தாகும்!
நீர்போலச் செலவழித்தார் வாழ்க்கை யெல்லாம்
நிழலாக மாறியதை நினைவில் கொள்க!

சிக்கனமே கற்றோர்முன் பணிவைக் காட்டும்
சிரித்தபடி வாழ்வதற்கு வழியைக் கூட்டும்
சிக்கனமே போதுமென்னும் சுவையை ஊட்டும்
சிறப்பாக நெஞ்சினிலே அமைதி ஏற்றும்
தக்கபடி செலவானால் உழைப்பு மிஞ்சும்
தன்மனத்தில் எப்போதும் உயர்வு கொஞ்சும்!
மக்களெலாம் தவறாமல் எளிய வாழ்வை
மகிழ்ந்தேற்றுக் கொள்கின்ற நாள்எந் நாளோ...!

சு. இராதாகிருட்டிணன் பி ஏ., (சுராகி)
15, காங்கயம் நெடுஞ்சாலை, கொடுமுடி - 638 151

## படி ! படி !! படி !!!

படி ! படி ! படி ! – நல்ல
பூந்தமிழ் ஏட்டைப் படி !
படி ! படி ! படி ! – நாளும்
பொதுமறை வழியில் வாழும் படி !

கண்ணின் மணியே பாட்டைப் படி !
கனியே கரும்பே கவிதை படி !
பண்ணுடன் தாளம் கூட்டிப் படி !
பைந்தமிழ் இசையில் தோயும் படி !

பாரதிதாசன் பாட்டைப் படி ;
பாவா ணர்தம் நூலைப் படி !
சீருறுங் குறளை நாளும் படி !
செவ்விய நெறியில் வாழும் படி !

பாவலர் கருத்தைத் தேர்ந்து படி !
பார்புகழ் அவ்வைக் குறளைப் படி !
பாவளம் நுகர்ந்து பயின்று படி !
பகுத்தறி வோடு பழகிப் படி !

அரும்பாய் மொட்டாய் அவிழ்ந்து படி !
ஆன்றோர் வழியில் சென்று படி !
அருளாய் மணக்கும் இதழைப் படி !
அனைத்தையும் விடாமல் முயன்று படி !

பாவலர் இடிமுரசு, ஆல்பா இல்லம்
714, எம் டி எச். சாலை, மண்ணூர்பேட்டை,
சென்னை - 600 050.

# இன்பத் தமிழே !

ஓடைப் புனலின் குளிர்ந்த தமிழே ! — எம்
உயிரின் மேலாய்ச் சிறந்த மொழியே !
ஆடைப் பாலின் இனிய அமிழ்தே ! — உன்
அடியில் வீழ்ந்து பணிந்தோம் நலமே !
மண்டு புகழில் மலர்ந்த தமிழே — உன்
மானம் காக்கத் தருவோம் உயிரே !
பண்டு புலவோர் வளர்த்தார் உனையே — அவர்
படைத்த நூல்கள் அனைத்தும் மணியே !
தென்றல் உன்னுள் கலந்த துணையோ?— மலைத்
தேனும் மலரும் உன்றன் மரபோ?
குன்றம் அருவி எதிலும் இனிதாய் — நீ
கொஞ்சிக் குலவி ஒலிப்பாய் தமிழே !
தெய்வப் புலவர் அளித்த குறள்தான் — நீ
தீமை ஒழிக்க எழுப்பும் குரலோ ?
மெய்மக் கருத்தைத் தெளிவாய் உரைக்க — உனை
விடுத்தால் உலகில் மொழியும் இலையே !
முதலாய்ப் பிறந்து முதிர்ந்த தமிழே — நீ
மூப்பே அடையாக் கமுக்கம் எனவோ?
எளிதாய் ஒலிக்க வளமாய் அமைந்த — எம்
இன்பத் தமிழே ! ஆள்வாய் எமையே !
தூய்மை யுடனே விளங்குந் தமிழே ! — உன்
தொன்மை அறிய எவர்தாம் உளரோ?
வாய்மை அறிவை வளர்க்கும் தமிழே — உன்
மலராம் அடியைப் பணிவோம் நிதமே !

ப. எழில்வாணன், க. மு., கல். இ.,
11, அ. கோயில் தெரு, பள்ளபட்டி - 639 205
கரூர் வட்டம், திருச்சி மாவட்டம்.

# தமிழ்ப் பற்று !

தமிழென்றும் தமிழ ரென்றும்
 தமிழர்பண் பாடு என்றும்
அமிழ்தாகப் பொழுதெல் லாமும்
 அரற்றிக்கொள் கின்றார்; ஆனால்,
உமிழ்நீரைக் கூட அன்னார்
 ஒலிப்பதே யில்லை தூய
தமிழ்ச்சொல்லால் ! அதற்காய் எந்தத்
 தாழ்ச்சியும் கொள்வ தில்லை !

தாய்மொழிப் பற்றில் லாமல்
 தம்மினப் பற்றுண் டாமோ ?
பாய்விரித் தெவர்க்கும் கற்பைப்
 பணம்பண்ணும் பரத்தை போல
நாய்களின் இழிந்த வாழ்வை
 நடாத்துதல் பெரிதாய் எண்ணிப்
பேய்களிற் பேயாய்க் கீழ்மைப்
 பித்தேறி யழிய லாமோ ?

புற்றுநோ யாகக் கீழ்மை
 புகுந்திடும் நோய்தான் எங்கும்
தொற்றுநோ யாகத் தொற்றித்
 தொடர்ந்துவந் திடக்காண் கின்றோம் !
மற்றநோய்க் கெல்லாம் தக்க
 மருந்தினைக் கண்டுங் கூட
அற்றதே கீழ்மை நோய்க்கு
 அரியதோர் மருந்து தானே !

ஆங்கிலச் சொற்க ளாலே
அனைத்தையும் குறிப்பி டாமல்
ஊங்கில்லை யென்ப தாக
உரைப்பவர் நிரம்ப வுள்ளார் !
ஓங்கிய தமிழைப் பற்றாய்
ஒலிக்கவும் விழைவா ரில்லை !
நீங்கிய தெங்கும் தூய
நிறைதமிழ்ச் சொற்க ளெல்லாம் !

தன்னையோர் தமிழ னென்று
சாற்றிக்கொள் கின்ற தற்கும்
அஞ்சிடும் அலிக ளெல்லாம்
ஆவரோ தமிழ ரென்று ?
முன்பொரு காலம் வாழ்ந்த
மூத்தநற் றமிழ ரெல்லாம்
இன்றில்லை ! இந்நா ளோரைத்
தமிழர்க ளென்ன லாமோ?

இனமானம் மொழிப்பற் றெல்லாம்
இன்றுநம் தமிழர்க் கில்லை !
மனத்தினில் கூட வந்த
மரபினைப் பற்றிக் கொஞ்சம்
நினைப்பதும் இல்லை ! செல்வம்
நிறையவே ஈட்டு தற்குத்
தனையெந்தக் கோலஞ் செய்து
கொள்ளவும் முன்போ வாரே !

முன்போவார் வருவாய் ஒன்றே
  முதன்மையாய்க் கருத்தில் கொண்டு !
''தன்மானம் என்றால் என்ன?''
  என்றுதான் வினவு வார்கள் !
என்னதான் எழுதிப் பேசி
  இராப்பகல் விளக்கி னாலும்
தன்னுயிர் பிழைத்தற் காகத்
  தாயைவிட் டோடு வாரே !

இப்படிப் பட்டோர்க் கெந்த
  இகழ்ச்சியும் உறைப்ப தில்லை !
எப்படி யேனும் தின்று
  கொழுப்பதே உய்வென் பார்கள் !
ஒப்பிலா உரிமை பற்றி
  ஓர்ந்திட மாட்டார் ! கீழே
துப்பிய எச்சி லாகத்
  தூதூதூ மலிகு வாரே !

தும்பினை விட்டு விட்டுத்
  துரத்தியே வாலைப் பற்றி
வம்பினில் உதைபட் டிட்டு
  வருந்தியே வீழ்ந்து பின்னர்
கொம்பினைப் பற்றிக் காளைக்
  கொட்டத்தை அடக்க எண்ணிப்
பம்புதல் வெற்றி யுண்டு
  பண்ணிடும் செயல தாமோ ?

இந்தியா என்றும் அஃதில்
இந்தியன் என்றும் பின்னர்
இந்திக்கே உரியன் என்றும்
இந்தியா இந்தி யென்றும்
செந்தமிழ் இனத்தைக் கூடச்
சிங்களன் போலஓர் நாளில்
வந்திங்கு விரட்டு தற்கு
வாரானோ இந்திக் காரன் !

ஏதிலி யாக வந்த
ஈழத்துத் தமிழ்மக் கட்குப்
போதிய அளவில் நாமும்
புகலிடம் தந்தோம் ! நாளை
ஏதிலி யாக நாமும்
ஏகுமோர் நிலையெய் திட்டால்
சாதலைத் தவிற வேறோர்
சார்பிட மில்லை ! அந்தோ !

இத்தகு நிலைவா ராமல்
இருப்பதற் காக வேதான்
எத்தடை வரினும் வென்று
எப்போதும் உழைப்ப தற்கு
முத்தமிழ் இளையோ ரெல்லாம்
முன்வந்து புதுமை நாட்ட
முத்திரை பதித்து மாண்பை
முழங்கிட வேண்டு தும்மே !

# பூணுக விழிப்பே !

ஒய்ச்சல் மறந்தே ஒவ்வா தனவும்
மேய்ச்சல் செய்த மறிகள், வேங்கைப்
பாய்ச்சல் கண்டதும் பதைபதைத் தோடிக்
காய்ச்சல் கண்டு குளறிடு கின்றன !

வீழ்த்திய பேரிரை வீழ்ந்தால் இடமே
தாழ்த்திய தாகத் தானே இறக்கும்
வேங்கைக் கிந்த மறிகள் ஆகா;
நீங்கும் அவற்றை நினைவில் கொள்க !

அதற்குள பேரிரை இனமே தனியாம் !
எதற்கே யிந்த ஈன மறிகள்
பதைபதைப் புற்றுப் பழிபட வேண்டும் ?

வதைபடு வாழ்வை வேரறக் களையப்
புறப்பட லாமே பொங்கி யெழுந்து !
நிரப்பிட லாமே வேங்கைக் குதவி !

செருப்படி யெத்தனைச் செகங்களுக் கெய்து
சிறப்பிழந் திப்படிச் சிறுமைப் படுவதோ ?
வரப்படுங் காலத்தை வாழ்த்தி டாமலே
நரகலின் புழுவாய் நாறி அழிவதோ...?

வேங்கை மரபில் விளைந்த பிறவிகள்
தூங்கத் தனத்தால் தொலைந்த மறியின்
தோலைப் போர்த்துத் திரிவதோ மறிகளாய்...!
மூளையை அடகு வைப்பதா அழகு ?

வேளைகள் தோறும் விலாவும் பிதுங்க
நாளைய இரையையும் நாத்தின வெடுத்துப்
பன்றியாய்த் தின்று பல்லை யிளித்துத்
தன்மானம் விட்டுத் தரமெலாம் கெட்டுச்

சூடு சொரணை தொகையாய் இழந்து
நீடு அடிமை நிலையில் உழந்து
எவர்க்கோ உதவிய எச்சில் இலைகளாய்
இவண்அழி வெய்தல் இழிவே இழிவே!

வேங்கை மரபில் விளைந்த பிறவிகள்
நீங்களுந் தாமே நினைவு மூண்டே!
ஓங்கும் முறைமை ஒப்பற்ற வாழ்வு
தாங்கும் வேட்கையில் தடிந்தெழுந் திடுக!

பிய்த்தெறிந் திடுக பிணமறித் தோலை
பொய்த்திடத் தூக்கம் பூணுக விழிப்பே!
எய்திட முறைவாழ்க்கை ஏரார்ந்த குமுகாயம்!
எய்திட எல்லார்க்கும் எல்லாமும் இங்கே!

செய்திட வேண்டும் சிறப்பு
உய்திட நலந்தரும் உரிமைகள் பெற்றே!

# தரணியிலே பெருமை ....

முன்னோர்கள் பெருமையை மூத்ததமிழ் அருமையை
முழுமையாய் அறிய மறந்தே
பின்னோர்கள் ஆடிடும் ஆட்டங்கள் கொஞ்சமா
பெருமையைச் சேர்ப்ப திதுவா?
மன்னாதி மன்னரும் மாபெருஞ் செல்வரும்
மற்றுமுள் ளோரு மிங்கே
மண்ணோடு மண்ணாக மாய்ந்தகதை அறிந்துமே
மயக்கத்தில் கிடப்ப தென்னே!

எத்தனைக் கட்சிகள் எத்தனைச் சாதிகள்
எத்தனைச் சமய பேதம்!
எத்தனைச் சங்கங்கள் எத்தனைச் சார்புகள்
எத்தனைப் பிரிவு வாதம்!
எத்தனைச் சண்டைகள் எத்தனைப் போராட்டம்
எத்தனைப் பகைமை மோதல்!
இத்தனையும் பெற்றுள்ள இப்பெரிய நாட்டினில்
இடமேது . பெருமை வாழ!

எத்தனை வேற்றுமைகள் இருந்தாலும், இந்நாட்டை
இருப்பாக்கிக் கொண்டு வாழும்
அத்தனைப் பேருமே அருந்தமிழ் மொழியினுள்
அடக்கமாம் என்ப துணர்க!
வித்தாகி விளைவாகி விளைந்திட்ட பயிருக்கு
வித்தின்றிப் போவ துண்டோ...!
சத்தான தமிழ்த்தாயின் பிள்ளைக ளானோர்க்குத்
தமிழ்ச்சுவை கைப்ப தேனோ...?

கன்னடம் தெலுங்கு வங்காளி இந்தி
கவின்மலை யாள துளுவ
அன்னைகள் தம்முடைப் பிள்ளைக ளால்நலம்
அடைகின்ற பெருமை போல
அன்னையாந் தமிழுக்கு அவள்பெற்ற பிள்ளைகள்
ஆதரவு காட்ட வில்லை!
முன்னைய பழம்பெருமை பேசியே செய்கையில்
முழுமுச்சாய்க் கொள்ள வில்லை!

வானார்ந்த பெருமைக்கு நிலைக்கள மாகியே
வயங்கிய தமிழ கத்தில்
தேனார்ந்த செந்தமிழும் பண்பாடும் இந்நாளில்
திகட்டிப்போய் விட்ட தேனோ...
ஊனார்ந்த உயிரார்ந்த உளமார்ந்த தாய்மொழி
உணர்ச்சிபோய் விட்ட தாலோ...
தானார்ந்த தன்மானம் தகர்ந்துபோய்ச் சிதறிடத்
தயங்கியே கிடக்க லாமோ...!

தன்னினம் தன்மொழி தன்னாடு என்கின்ற
தனிப்பற்று மிக்க பேர்கள்
அன்றாடம் இந்தியத் தமிழனரக் கணக்கின்றி
அழித்துக் கொண் டிருப்ப தறிந்தும்
என்னடா இன்னும்ஒரு முடிவுக்கும் வாராமல்
இழுப்பதா பெருமை நமக்கு !
வன்முறைகள் எத்தனை நாள்வரை என்கின்ற
வாய்ச்சொல்லில் வீர மில்லை !

இமயத்தில் கொடிகட்டி எங்கெங்கும் புகழ்கொட்டி
இப்பெரிய புவியையே அந்நாள்
தமிழாட்சி செய்திட்ட தன்னே ரிலாதபெரும்
தனிப்பெருமை யிருந்துங் கூட
நமில்நாமே காட்டிக் கொடுத்திடு கின்றதோர்
நாகரிக மற்ற செயலில்
உமிழ்ந்திடத் தக்கதாய் எட்டப்பன் மரபாக
உயிர்வாழ்ந்து வருவ தேனோ...

மற்றவர்கள் நமைக்கண்டு மறத்தன்மை கொண்டுதன்
மானத்தில் விஞ்சி விட்டார் !
வற்றாத பெருமைக்கும் வாழ்வுக்கும் உரிமைக்கும்
வாரியெனப் பொங்கி எழுந்தார் !
சற்றள வேனுமிவ் வுண்மையை நம்மனம்
சரியாகப் புரிந்த துண்டா ..
வெற்றுவே தாந்தங்கள் விண்ணளவு பேசலால்
விளைகின்ற பெருமை உண்டோ !

அறிவியலும் ஆன்றகலைச் செல்வமும் அறிவறிந்த
அறம்பொருள் இன்ப நலமும்
செறிந்திலங்கி வந்திட்ட செந்தமிழின் துணைகொண்டு
திக்கெட்டும் உள்ள மொழிகள்
விரிவடைந்து நம்கருவை விளைவாக்கி இன்றுநாம்
விலைகொடுத்து வாங்கும் வண்ணம்
புரிகின்ற புதுமையைப் பொழுதெலாம் அறிந்தும்நாம்
புலனவிந்து கிடப்ப தென்னே,..!

வந்தவரை வரவேற்று வாழ்வித்து வாழ்வித்து
வாழாமல் போன தமிழர்
செந்தமிழின் உரிமையும் சீர்மையும் மறதியால்
தேயவே போக விட்டார் !
வந்தவரைத் தன்வய மாக்காமல் வந்தவரின்
வயமாக்கிப் பணிந்த தாலே
வந்ததே கேடுகள் ! வஞ்சநரி யானையை
வழுக்கலில் வீழ்த்த லாச்சே !

பிறர்க்காக வாழ்வதே பேரின்ப மென்றுபோய்
பேரடிமை யாக லாமோ .
மறக்காமல் தன்மானம் தாய்மொழி தாய்நாடு
மதிப்பதைத் துறக்க லாமோ...
துறந்தபெரி யோர்களும் தாய்வழி யுரிமையைத்
துறக்காமல் போற்றி னார்கள்!
இறப்புக்கு முன்னும் பேறுக ளாமிவை
இழக்காமை பெருமை யாமே!

அங்கையில் வெண்ணெய்யை வைத்துக்கொண் டேநெய்க்கு
அலைகின்ற பேதை போல
தங்களுள் மண்டிக் கிடக்கின்ற மாபெரும்
பெருமையை உணர மறந்தே
எங்கெங்கோ ஓடி அலைகின்ற கொடுமையை
என்னென்று சொல்வ திங்கே
அங்கங்கு மற்றவர் அடைந்திடும் பெருமையை
அறிந்தேனும் திருந்து வாரா...?

அவரவர் தகுதியை அவரவர் வளர்த்திட
அவரவர் அன்னை மொழியை
தவறாமல் உயிரெனப் போற்றுதல் வாழ்க்கையில்
தனிப்பெருங் கடமை யாகும்!
எவரேனும் தமிழரல் லாதவர் இரண்டுபேர்
எதிர்கொள்ளும் வேளை தன்னில்
அவரவர் தாய்மொழியில் பேசியே கருத்தினை
அறிவித்துக் கொள்ளு வார்கள்!

ஆனாலோ தமிழர்கள் மட்டுமே எப்பவும்
ஆங்கிலத்தில் பேசி மகிழ்வார்!
தேனார்ந்த தமிழுக்குச் சேயென்று பிறந்துமே
திருத்தமுறத் தமிழைக் கொள்ளார்!
நாணாமல் கையொப்பம் கருத்தொப்பம் இவைகளிலும்
நந்தமிழைத் தள்ளி வைப்பார்!
வீணான சிறுமையே பெருமையாய்த் தருக்குமிவர்
வீழ்த்தினார் பெருமை தானே!

தன்னினம் தன்மொழி தன்னாடு என்பதில்
தனியார்வம் சற்று மில்லார்
பொன்பொருள் பதவிகள் பெறுவதற் கெதனையும்
புரியவே துணிவு கொள்வார்!
தன்னலப் புள்ளிகள் என்பதற் கொருபெரும்
காட்டாக விளக்க மாவார்!
இன்னண மானவர்கள் இருக்கின்ற வரையிலும்
இயம்பிடும் பெருமை வருமோ...?

எப்படி யாயினும் இன்னுயிர் வாழ்வதே
எல்லார்க்கும் கொள்கை யென்றால்
தப்பில்லை! குக்கல்கள் பன்றிகள் கூடத்தான்
தம்முயிர் போற்றி வாழும்!
உப்பில்லை என்பதை உணராத நாவுக்கு
உறுசுவையில் நாட்ட மெதற்கு?
இப்படிப் பட்டநிலை இருக்கின்ற போதினில்
இயம்பிடும் பெருமை வருமோ!

இறைவனை வழிபடவும் தட்சணைகள் இல்லாமல்
இந்நாளில் முடிவ தில்லை
துறைதோறும் தட்சணைகள் இல்லாமல் எச்சிறிய
தொழிலுமே நடப்ப தில்லை!
அரசியல் முதலாக அனைத்தியல் களிலுமே
அதுவேதான் இற்றை நிலைமை!
முரசறைந் தேபெரும் முழக்கமே செய்வதால்
முகிழ்க்குமோ பெருமை யிங்கே!

அறிவியலில் முன்னேற்றத் தகுதியை இந்நாளில்
அடைந்ததாய்ப் பீற்று வார்கள்!
அறியாமை மக்களினும் கடைப்பட்ட மக்களாய்
அநாகரிகம் புரிகு வார்கள்!
வெறியாக எடைக்குஎடை வரனுக்குப் பொன்னென்று
மணம்பேச முந்து வார்கள்!
குறிக்கோளே எல்லாமும் பணத்தில்தாம் என்பதைக்
குணத்திலே காட்டு வார்கள்!

பொன்னென்றும் பொருளென்றும் புவியென்றும் பேறுகள்
பொருந்திய பேர்க ளுக்கே
பெண்ணென்று பிறந்திட வேண்டும்இல் லாவிட்டால்
பிறவாம லிருக்க வேண்டும்!
அன்றேல்ஓர் ஔவையாய் ஆண்டாளாய்ப் பூமியில்
அவதார மாகி விடலாம்!
இன்றைய அறிவியல் இதற்கெலாம் வழிகாண
இயலாமை பெருமை தானா..!

என்னதான் திறமைகள் பெற்றிருந் தாலுமே
எள்ளளவும் இல்லை சிறப்பு !
அன்பாலும் பண்பாலும் அறிவாலும் பெறுகின்ற
ஆக்கங்கள் மிகவும் குறைவு !
கொன்றேனும் குருதியைக் குடித்தேனும் வன்முறை
கொள்வாரை நாடு மதிக்கும் !
இன்றிந்த நிலைமையில் இலவங்காய் இனிக்குமோ
இணையற்ற பெருமை வருமோ...!

இலஞ்சமும் பதுக்கலும் கொள்ளையும் கடத்தலும்
இலட்சிய மான பின்பு
இலங்கவே அறநெரிகள் பேசியே வருவதில்
இலாபந்தான் என்ன இங்கு !
இலங்கையில் சிங்களன் இழைக்கின்ற கொடுமைபோல்
இங்கேயும் ஒருகா லத்தில்
கலங்காமல் இந்திமொழி வெறியர்கள் செய்வதைக்
காண்கின்ற நிலைமை வரலாம் !

நம்முடைய உரிமைக்கு எரியூட்டுங் கயவர்க்கு
நாம்உரிமை வழங்க லாமா. .
எம்முடைய பொருளை நீ திருடிக்கொண் டோடுவாய்
இதுகுற்ற மல்ல வென்பாய் !
உம்முடைய பொருளைநான் பாதுகாக் காமையே
குற்றமென வாதாடு வாய் !
பொம்மைபோல் இன்னும்நாம் பொறுத்துக்கொண்
டிருப்பதால்
பொங்குமோ பெருமை யிங்கே !

அழுகாத பிள்ளைக்கு அரவணைப் பில்லையென
ஆருமே சொல்லு வார்கள் !
முழுவதும் வாய்மூடி ஊமையாய் இருந்திட்டால்
முற்றிலும் உரிமை போகும் !
விழுமிய தமிழுக்கும் தமிழர்க்கும் நாட்டிற்கும்
வியனுலகில் பெருமை வரவே
கொழுவிய எரிமலைக் குழம்பாகக் கொதித்தெழுந்து
கொட்டுங்கள் வெற்றி முரசே !

ஒருநொடிப் போதுமினி ஓய்ந்திருக் காமலே
உழைத்திட வேண்டும் மேன்மேல் !
இருங்கட லாய்ப்பொங்கி எழவேண்டும் பெருவெற்றி
எதிர்கொண்டு வாகை சூட !
பெரும்புவியில் நம்உயர்வு பிறங்கிவந் திட்டதைப்
பீடுறச் செய்ய வேண்டும் !
அருந்தமிழ் சிறந்தோங்க அனைவரும் நலம்எய்த
ஆற்றவே வேண்டும் செயலே !

இழிவான செயல்களும் பிரிவினை வாதமும்
இல்லாமல் ஒழிய வேண்டும்
எல்லாரும் இந்நாட்டு மக்களே என்கின்ற
ஒற்றுமை மலர வேண்டும் !

எழிலார்ந்த அவரவர் தாய்வழி உரிமைகள்
என்றென்றும் வளர வேண்டும்
எவரையும் எவருமே தாழ்த்தாமல் மதிக்கின்ற
எண்ணங்கள் ஓங்க வேண்டும் !

வழிவழி சிறந்தஇந் நாட்டின்நற் பண்பாடு
வளமைபெற வாழ வேண்டும்
வானகம் இங்குத் தென்படு கின்றதோர்
வாய்மையில் ஆழ வேண்டும்!

அழியாத பெரும்புதுமை ஆக்கவே வேண்டுமிறை
ஆற்றலைத் தேக்க வேண்டும்
ஆல்போல வள்ளுவப் பண்பாடு செழிக்கின்ற
அமைப்பையுரு வாக்க வேண்டும்!

தழுவியே தூயதமிழ்க் கொள்கையை எல்லோரும்
தண்ணளி எய்த வேண்டும்
தலையாய இப்பெரும் பாரத பூமிக்கு
தரணியிலே பெருமை வேண்டும்!

வணக்கம்

---

7–5–87 கொடுமுடி பெரியகோயிலில் கவியரசர் சக்திக்கனல் அவர்கள் தலைமையில் நிகழ்ந்த சித்திரைப் பெருவிழாக் கவியரங்கத்தில் "தரணியிலே பெருமை..." என்னும் தலைப்பில் முழங்கப்பட்ட பா.

# பாரத ஒருமைப்பாடு !

புதையுண்ட பொன்னைப் போலப்
பூமியில் பலரின் வாழ்க்கைக்
கதையுண்டு, கேட்ப தற்குக்
கவர்ச்சியாய் இருக்கும் ! பொன்னே
புதையுண்டு போயி ருந்தால்
புறப்பட்டு விடுவார் அந்தப்
புதையுண்ட இடத்தைத் தேடிப்
பொங்கும்பே ராசை யோரே !

பனைமர நீழல் போலப்
பாதையில் சிலபேர் நீழல்
தனைப்பெரி தாகக் கொள்வார் !
தனியொரு காட்டில் ஆல
மரத்தின்நன் நீழல் வீணே
மறைப்புண்டு கிடக்கும் ! ஆல
மரம்பாதை ஓரம் வாரா,
பனைமரம் காடே காதே !

இயற்கையின் நியதி யாலே
இப்படிச் சிலநல் லோரின்
உயர்வுசூழ் நிலையில் மாற்றம்
உண்டாகி விடுவ தாலே
பயனுள்ள இடத்தி லந்தப்
பயனுள்ள பொருள்இல் லாமல்
பயனில்லா இடத்தி லேயே
பயனுள்ள பொருள்சே ரும்மே !

பசித்தவன் இல்லந் தன்னில்
பழங்கஞ்சி கூட இன்றி
நசிந்துகொண் டிருப்பான்! ஆனால்,
நாளெல்லாம் அளவில் லாமல்
உண்டதால் செரியா நோயில்
உழல்பவன் இல்லில் சூடாய்
உண்டாகிக் கொண்டி ருக்கும்
உண்டிகள் பலவாய்த் தானே!

எதையெதை என்றில் லாமல்
எல்லாமே மாந்தன் நாளும்
புதுப்புது வகையாய்க் கண்டு
பிடிப்பதாய்க் காணு கின்றோம்!
பொதுவாக எல்லோ ருக்கும்
பசிதீர வழியொன் றைத்தான்
இதுவரைக் கண்டோ மில்லை!
இனிமேல்தான் காணு வோமோ?

உழைப்புப் நல் ஊதி யம்மும்
உயர்ந்தபண் பாடும் சேர்ந்து
பிழையில்லா வகையில் எந்தப்
பிணிகளும் சூழா வண்ணம்
தழைத்திடத் தொழில்கள் நாளும்
தக்கது செய்ய வேண்டும்
மழைவளம் குன்றி னாலும்
மற்றைய வளம்குன் றாதே!

கங்கையை இழுத்து வந்து
காவிரி யோடு சேர்த்துப்
பொங்கிடும் வளம்உண் டாக்கிப்
புரட்சியைச் செய்து – ஒன்றே
இந்தியா என்னும் மாண்பை
இசைக்கலாம் செயற்க ரிய
இந்தவோர் பணிக்காய் எந்த
இழப்பையும் ஏற்க லாமே!

வீணிலே விளையாட் டாக
விரைந்திடும் தொகையை ஓர்நல்
காணிக்கை யாகக் கொண்டு
கங்கைகா விரிநீர்த் திட்டப்
பணிக்காகச் செலவு செய்தால்
பாரத அன்னை தாகம்
தணிக்கின்ற தொண்டா கும்மே!
தமிழ்நிலம் செழிப்பெய் தும்மே!

தேவையில் லாமல் எந்தத்
திட்டமும் வகுக்க வேண்டாம்
சேவையே என்று சொல்லிச்
செலவினை வளர்க்க வேண்டாம்
மாவையம் வியப்பை எய்தும்
வகையினில் கங்கை ஆற்றைக்
காவிரி யோடு சேர்த்துக்
காட்டுதல் புரட்சி யாமே!

ஒருதலை முறைதான் ஓடி
ஒழிந்தாலும் பரவா யில்லை!
வரும்தலை முறையே னும்நல்
வளத்தினைப் பெற்றுய் யட்டும்!
பகிரதன் கொணர்ந்த கங்கை
அகத்தியர் காவி ரிக்கும்
பகிர்ந்துகொண் டிடுதல் தன்னை
பாரத ஒருமை பாடே!

# தாய்மண்

24–9–87 கோவை வானொலியில் ஒலிபரப்பான கவிதை.

''தெய்வத்தால் ஆகாது'' ... என்றே – தெளிவாய்ச்
செப்பியே விட்டார் வள்ளுவர் அன்றே!
செய்திடும் முயற்சியி னாலே – பயன்
சேர்ந்திடும்! ஆர்ந்திடும் வெற்றிமுன் னாலே!

மெய்வருந் தாமலே வாளா – இன்னும்
மிடிபட்டுக் கிடப்பதால் எதுவுமே மீளா!
உய்திட வேண்டுமேல் நன்று நீ
உழுற்றிடு உழுற்றிடு உறுதியில் நின்று!

நடப்பது நல்லதாய் நடக்கும் – என்ற
நம்பிக்கை பலப்பல தடைகளைப் கடக்கும்
கிடப்பது கிடக்கட்டும் என்று – நலன்
கிடைத்திட உழைத்திடு சோர்வினை வென்று!

அடக்கிட வேண்டாம் உணர்வை – பிறர்
அடிகளை வருடியே இழக்கா தே அறிவை !
அடல்கொண்டு கிளர்ந்தெழு எழுக – இழிவுகள்
அடைந்துள்ள குமுகாய வயலினை உழுக !

குட்டையைக் குழப்புதல் போலே – இந்தக்
குமுகாயந் தன்னையும் குழப்புவோ ராலே
கெட்டது சீரனைச் செப்பு – வசை
கேட்டுப்பின் வாங்குதல் மிகமிகத் தப்பு !

விட்டது பெருமைகள் என்று – இன்னும்
வீணே காலத்தைக் கழிப்பதா நன்று ?
பட்டது போதுமே தம்பி – இனி
பாய்ந்திடு ! பொருதிடு அம்பென எம்பி !

பேருந்தை எதிர்பார்த் திடல்போல் – நீ
பெறுகின்ற வாய்ப்பையும் எதிருக கடல்போல் !
சீருற வாய்ப்பமைந் திட்டால் – அதைச்
சிக்கெனப் பிடித்துமுன் னேறுஒரு எட்டால் !

ஆருக்கும் அஞ்சுதல் வேண்டாம் – செயல்
ஆற்றிடு வளர்ந்திடும் புகழ்மிக நீண்டாம் !
நேருக்கு நேர்நின்று பொருது – உன்
நேர்மைத் திறத்துக்குக் கிடைத்திடும் விருது !

அறிவினைத் தொகுத்துவைத் திடவும் – பே
ராற்றலைத் திரட்டிநல் வழிவயின் படவும்
குறிக்கொண் டெப்பவும் உஞற்று – அட,
குறும்புகள் செய்துகொண் டிருப்பதை அகற்று !

சரியெனப் படுவதைச் சாற்று — இது
சரியல்ல வெனப்பட்டும் சாராதே ஏற்று!
நரியெனப் படுபவர் வருவார் — அவர்
நயமுடன் பழகியே துயர்மிகத் தருவார்!

உள்ளத்தை ஒருநிலைப் படுத்து — அதை
உயர்த்திடு தாழ்வாய்ப் போவதைத் தடுத்து!
பள்ளத்தைப் பார்த்தடி வைப்பாய் — முன்
பார்வையில் போலிப் புனைவுகள் பிய்ப்பாய்!

கள்ளத்தைப் பகைவர்கள் கொண்டு — பழகிக்
கழுத்தையும் நெரிப்பர்எப் போதுமே உண்டு!
வெள்ளத்தைப் போல்பெரு கட்டும் — உன்
வியன்மதி எதனையும் வெற்றிகொள் ளட்டும்!

நீயொரு புதுவழி காட்டு — அதன்
நிகரிலாத் தன்மையால் மாண்பினைக் கூட்டு!
போயொரு கீழ்நிலை சார்ந்து — நீ
பொய்த்தொழி யாதிரு வாழ்க்கையில் சோர்ந்து!

தீயொரு வேளையில் பற்றும் — அப்படித்
தீயர் உறவும்ஓர் நாளையில் தொற்றும்!
ஈயொரு மலரிலும் ஒட்டும் — பின்
இழிவுறு பொருளையும் போயது தட்டும்!

அப்படி யொருநிலை இழிவு — அதில்
ஆயிரம் எய்தினும் அடைந்திடும் அழிவு!
செப்பமே அடிப்படை யாக்கி — தொண்டு
செய்திட வேண்டுமே சிறுமையை நீக்கி!

தப்பென படுவதே இன்றி — வாழ்வு
தன்னிக ரின்றியே வயங்குதல் வென்றி!
ஒப்புக்கொள் வாய்இதைத் தம்பி — உள்ளம்
உணர்த்திடும் மொழிகளே உயிரென நம்பி!

காலத்தை வீண்படுத் தாதே! — இதைக்
கருதாம லிருப்பது மிகமிகத் தீதே!
கோலத்தைக் கண்டதும் மயங்கி — அடக்
கொள்கையை விட்டுப்போய்க் கீழ்மையில் இயங்கி

ஆலத்தை உண்பதா அறிவு? — நீ
ஆய்ந்திடு, தேர்ந்திடு, பூண்டிடு செறிவு!
ஞாலத்தை வென்றிட லாமே! — இனி
ஞாயத்தை கொண்டிட மேன்மையுண் டாமே!

அச்சத்தை முதற்படி யாக்கி — நீ
அணுவணு வாகஇன் னுயிரினைப் போக்கி
செத்தையைப் போல்அழி வுறவோ? — தமிழ்த்
தேயத்தில் பிறந்துகீழ் நிலமையைப் பெறவோ!

எத்தகைத் துன்பிலும் மீள்க — புவி
எண்டிசை யும்புகழ்க் கொடிகட்டி ஆள்க!
புத்தம் புதியநற் பேறு — நீ
புகழ்பட வாழ்தல்தாய் மண்ணுக்கு வீறு!

# 'கிரிக்கெட்'

பொன்னான நேரத்தைச் செயலை யெல்லாம்
போக்கடித்துப் பொல்லாத பித்துக் கொண்டு
தன்னையே மறந்திட்டுக் 'கிரிக்கெட்' என்னும்
மட்டைப்பந் தாட்டமே 'உயிர்'என் றிந்நாள்
எண்ணற்ற உள்ளங்கள் பொய்மா யைக்கே
இரையாகிக் கொண்டிருக்கும் பரிதா பத்தை
என்னென்று தான்சொல்ல... இதுவும் தான்ஓர்
சூதாட்டம் என்றிட்டால் பிழையும் உண்டோ?

குழந்தைகள் முதலாக முதியோர் ஈறாய்
யாவருமே பந்தாட்ட வெறியில் மூழ்கி
இழந்திடு கின்றார்கள் தங்களைத் தாங்களே!
எப்போது தானிந்த உன்மத்தம் ஒழியுமோ...!
முழங்கிடு கின்றார்கள் இதுவேதான் செய்தியாய்!
முப்போதும் வயிறு நிரம்பாத வன்கூட
அழகிது தானென்று மதித்திடு கின்றனன்!
அந்தோ! இந் நாட்டையே விளையாடும்
விளையாட்டே!

விளையாட்டாய் வெள்ளையன் விட்டுச்சென் றிட்டஇவ்
விழைவாட்டந் தன்னையோர் விலையாட்டம்
ஆக்கியே
விளையாட விட்டார்கள்! விளையாட்டே விளையாட்டு
விரும்பிகளைப் பந்தாட! வினையேவந் தாட!
களைந்திடத் தக்கவை நிறையவே உண்டு
களிப்பதேன் மாயக் கனவையே கண்டு?
விளைந்திடத் தக்கவை விளைந்திட வில்லை!
விளையாட்டைத் தவிரவேறு வேலையே யில்லையே!

க. அ. பிரகாசம் (ஒளியவன்)
R. S. மருத்துவமனை,
கொடுமுடி – 638 151, பெரியார் மாவட்டம்.

## குடிக்காதே...!

(நவம்பர்—1987 கவிதா மண்டலம் இதழில்மலர்ந்தது)

குடிக்காதே மச்சான் குடிக்காதே !
குடிச்சுக் குடும்பத்தைக் கெடுக்காதே !
மதுவைத் தொடாதே
மதியை அது கெடுத்துவிடும் !
கள்ளைக் குடிக்காதே
கருணையை நீயும் இழக்காதே !
கொடிய குடி குடித்தால்
குழந்தை குட்டி துன்புறுமே !
குடிக்க கூழுமில்லை
உடுக்க உடையில்லை
என்ற நிலை ஏற்படுமே
எரிக்கும் குடி குடித்தால் !
சான்றோர் மதியாரே
சண்டாளக் குடி குடித்தால் !
பார்வையைக் கெடுக்கும் குடியினாலே — நல்ல
பாதைதான் கிடைத்திடுமோ ?
குடிகெடுக்கும் குடியினாலே
குந்தகங்கள் ஏற்படுமே !
நச்சினும் கொடிய குடிகுடித்தால்
நலிந்து நீ அழிந்திடுவாய் !
மதிப்பாய் இருக்கும் மச்சான்
மதுவை உடனே விட்டு விடு !
அண்ணல் காந்தி சொன்னதையும்
அய்யா அண்ணா எதிர்த்ததையும் — நம்
அரசு இன்று சொல்வதையும்
மதித்து நீயும் நட மச்சான் !
மகிழ்வாய் வாழ்க்கை நடத்திடலாம் !
மாந்தனாய் வாழக் கற்றிடலாம் !

கோட்டை செல்வம், பி.காம்.,
கோட்டைக்காட்டுவலசு, சிவகிரி வழி, 638·109.

# தமிழே, வாழியவே !

பாரில் சிறந்த பைந்தமிழே ! – உயர்
பண்பு முதிர்ந்த செந்தமிழே ! – குறள்
தேரில் உலாவரும் தென்றமிழே ! – எண்
திக்கிலும் ஒலிக்கும் தேன்தமிழே !
முத்தெனப் பனுவல்கள் குவித்திட்டாய் ! – புதுமை
முகிழ்ந்திட என்றும் உயர்ந்திட்டாய் ! – எங்கள்
சொத்தென உயிரொடு கலந்திட்டாய் ! – வான்
சுடரென வாழிநி ! வாழியவே !

செந்தமிழ் மன்னவர் பலப்பலரும் – அன்று
சிறப்புடன் வாழ்த்திய பூந்தமிழே !
விந்தைகொள் அறிவியல் வளர்ந்திடவே – புது
விளைச்சல் கொண்ட வளர்தமிழே !
சந்தனப் பொதிகைத் தொட்டிலிலே ! – அகத்தியர்
தாலாட்ட வளர்ந்த மணித்தமிழே !
எந்தனின் உள்ளம் களிப்புறவே – நீ
என்றென்றும் வாழிய ! வாழியவே !

கற்பதற் கெளிய கண்ணித்தமிழே ! – சிந்தை
கனிந்திடத் தளிர்க்கும் பொன்னித் தமிழே !
நற்பெரும் பேறாம் நற்றமிழே ! – புவி
நயக்க விளங்கும் பொற்றமிழே !
சொற்பெருக் குள்ள தூய் தமிழே ! – இணை
சொல்ல முடியாத தாய்த்தமிழே !
அற்புத மாய்எங்கள் பிறப்புடனே – சேர்ந்த
ஆருயிரே, வாழிநி ! வாழியவே !

ந. சண்முகம் (சமன் குமார்)
கிழூர், கோக்கலாடா கிராமம்,
பெங்கால் மட்டம், நீலகிரி மாவட்டம்.

# நண்பனே... எழுச்சிகொள் !

கதிரவன் உதித்தனன் களைப்பெலாம் நீங்கி
கால்களை உந்திச் சிறகினை விரித்து
புதியநாள் பிறப்பை வரவேற் றிடவே
சோம்பல் முறித்துச் சுறுசுறுப் பாக
வண்ணப் பறவைகள் வானையே அளந்திட
எண்ணம்போல் பறந்தன எட்டுத் திசையிலும் !
நண்பனே ! எழுந்திடு, நீயும்
பூபாளம் பாடிப் புயல்வண்ணன்
கோபாலனை எழுப்பியது போல் – உன்னை
வசைஎன்னும் பூபாளத்தால்
வாய்நிறையப் பாடி – உன்
அன்னை எழுப்புமுன்
வாரிச் சுருட்டிக் கொண்டு
எழுந்திடு நீயும் !
காசைச் செலவு செய்தும்
கால்கடுக்க நடக்க எண்ணி – உன்
ஆசைக் கோட்டைதனை
அப்படியே விட்டிடாதே !
வேலை என்ற ஒன்றையே
வேலையாகக் கொண்ட உன்னைப்போல் இளைஞர்கள்
ஆலைகள் ஏற்படுத்தி ஆக்கமுடன் உழைத்திட்டால்
நாளை, உன்னை நானிலம் புகழாதோ ?
நாடும் முன்னேறிடாதோ....?
நாடு முன்னேற நம்போல் இளைஞர்கள்
பாடு படவேண்டும் ! பயன்காண யாண்டும் !
நண்பனே, நாட்டின் தலைவிதியை மாற்றிட
இன்றே எழுச்சிக்கொள் !

---

கொடுமுடி – செ. ஐயப்பன்
பாரதியார் பல்கலைக்கழகம், கோவை – 641 046.

# பாரதியே.. ..

பாரதியே! இன்றுனக்கு நினைவுநாள் – இந்தப்
பாரதத்தின் தலைவிதியை மாற்றிவிடப் பாடுபட்ட
பாரதியே! இன்றுனக்கு நினைவுநாள் – ஆம்,
நினைவு நாள்!
இறந்தகாலம் மறந்துவிட்டு,
இருக்கும் காலம் நினைந்து கொண்டு
இனிக்க ''வருங்''காலம் பற்றி எண்ணிய
எங்கள் 'பா'ரதி உனக்கு நினைவுநாள்!

பாரதியே, இன்றைக்குத்தான் உண்மையாகவே – நீ
பாரதத்தில் இருந்தபோதும், உனது எண்ணத்தால்
ஓரளவும் மாறமாட்டோம் என்பதறிந்தே – நீ
..ஓடுவோமே.. என்றுபாடி ஓட்டமெடுப்போம்!
தாய்குலத்தின் விடுதலைக்கும்
தன்மான உணர்வினுக்கும்
தளராமல் பாடிய நீ, இந்த நாள் – அட,
பேய் ப்பணத்தைப் பெண்ணழகைப்
பெரியளவு பாராட்டிப் பாடுவாய்!

எல்லாமே தலைகிழாய்ப் போனது – தூய
எண்ணங்கள் நஞ்சாக ஆனது!
எல்லாமே பணத்துக்குள் அடக்கமாம்! – அது
எதையுமே எளிதாக நடத்துமாம்!
அன்பிற்கே அடிமையாக இருந்த மாந்தர்கள் – இன்று
ஆரவாரப் பகட்டிற்கே அடிமையா ணர்கள்!
இன்பமுடன் பாரதத்தைப் பாடிய உன்னை – இன்று
இளித்தவாயை மூடாமல் எண்ணிப் பார்க்கிறோம்!

நினைவுநாள் இருந்ததால்தான் நினைவே வந்தது —அந்த
நினைவு நாளும் ஒருவகையில் வருமானம் தந்தது !
இல்லையென்றால் உனைநினைக்க முடியுமா இங்கு..?
இப்படித்தான் உன்னைப் போன்றோர் நினைவு வந்தது !
நாங்களெல்லாம் அறுப்பவனை நம்பிச் சென்ற
நாதியற்ற ஆடுகளாய் மாறிப் போனோம் !

பாரதியே !
பாஞ்சாலிக்கு அளித்ததுபோல்
உடைவழங்கவே — இன்று
பாலவனும் கண்ணனே வந்துகேட்டாலும்,
பாவையர்கள், 'உடை தேவை இல்லை' — என
உரைப்பார்கள் !
துச்சாதனனும் — வேலை
மிச்சமென்றே செப்புவான் !

பாரதியே !
உன்னிடத்தில் குயில்கள் கூடக்
குழைந்து பேசிற்றும் ! — இந்நாள்
குயில்கள் வரதட்சணைக்கே
கூவுகின்றன !

பாரதியே !
நினைவுகள் மகிழ்வானவை,
என்று யாரோ நினைவுக்குக் கொணர்ந்தார்கள்!
அதனால் உன்னை
நினைவிலே ஒன்றாக்கி, நேரிலே பிரித்துவைத்தோம்!

மா. மீனாட்சிசுந்தரம்
தமிழ்துறை, காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

# நீ, புதுமை பெண்ணல்லவோ!...

வெண்ணிலா போன்றவளே புள்ளி மானே! — இங்கு
வெகுநேரம் காத்திருக்கென் உள்ளம் தானே!
கண்ணிலே நீர்பெருகுது கண்மணி! — உனைக்
கண்டெடும்என் இமைமலரும் பெண்மணி!
பொன்நகையை வெல்லுகிற புன்னகையாளே! — நீ
போட்டுவிட்டாய் மந்திரத்தைக் கண்களினுலே!
விண்ணிடையே மின்னுகிற மீன்களைப் போல — நெஞ்சில்
விதவிதமாய்க் கனவுகள்தான் தேன்மொழியாளே!
வண்ணஉடை பின்னுகிற சின்ன இடையாள் — எனை
வசியம்செயும் தமிழ்க்கவிதை யன்னநடையாள்!
பெண்ணினத்தில் நீ புதுமைப் பெண்ணல்லவோ! — உயர்
உண்மையிதை மறுப்பார்தெரு மண்ணல்லவோ!
உன்எழிலைக் கண்டதும் என் உள்ளம்துள்ளும்; — அது
ஒருகோடிக் கவிதைகளைச் சொல்லும், சொல்லும்!
பொன்னெழிலுன் சிரிப்பொலிஎன் நெஞ்சினை அள்ளும் — மனம்
பூங்காற்ருய் பறந்துஎங்கோ செல்லும், செல்லும்!
கண்ணே, என்றேன் கண்களில் நிறைந்தாய் — என்
அன்பே, என்றேன் அகத்துள் உறைந்தாய்!
கண்டேன், எழுதக் கவிதை தந்தாய்! — 'உயிர்க்
காற்றே' என்பேன் காதல் தாராய்!

சுப்ரமணியன்
வாங்கப்பாளையம், கரூர் வட்டம், திருச்சி மாவட்டம்,

# பகுத்தறிவு !

பகுத்தறிவே மாந்தர்க்கு முதன்மை யாகும்
பகுத்தறிதல் இல்லையெனில் விலங்கே யாவர் !
பகுத்தெதையும் பார்ப்பதற்கு அறிவே வேண்டும் !
பயனில்லை பகுத்தறிவே தான்பொய்த் திட்டால் !
வகுத்திதனை எல்லோர்க்கும் வழங்கி னார்கள்
வரலாற்றில் இடம்பெற்ற பெரியோ ரெல்லாம் !
வெகுமதியாய் என்றுமிதைக் கொள்ளா விட்டால்
வெற்றியில்லை வாழ்க்கையிலே எனச்சொல் வீரே !

பகுத்தறிவுப் பாசறையாம் இங்கர் சாலும்
பயன்படவே மேன்மேலும் எடுத்துச் சொல்லித்
தொகுத்தளித்தார் உலகத்து மக்க ளெல்லாம்
தொல்லையின்றி வாழ்ந்துபயன் அடைய வேண்டி !
பகுத்தறிவால் உயர்ந்திட்ட புரட்சி மிக்க
பார்போற்றும் அம்பேத்கர் அண்ணல் அன்று !
புகுந்துவிட்ட அறியாமைக் கொடுமை என்னும்
புன்மையினைப் பகுத்தறிவால் வென்றிட் டாரே !

பகுத்தறிவை யேவளர்த்து மற்ற வர்க்கும்
பசும்பாலாய் ஊட்டியதை மகிழ வேண்டும் !
தகுதிக்கே தகுதிதரு தலைவ ரெல்லாம்
தன்மானம் பெற்றிருந்தார் தன்னே ரில்லாப்
பகுத்தறிவாம் பெரும்பேறு பெற்ற தாலே !
பாரிலது பெருகுதற்கே எல்லோ ருக்கும்
மிகுந்துவர வேவேண்டும் பற்று ! இஃதே
மிளிர்கின்ற மாந்தமனச் செம்மை யாமே !

துவாரகைக் கண்ணன்,
39, அரிதாசு முதல் தெரு குளத்தூர், சென்னை–600099

## நீ கூட.....

கூந்தலில் சூடிய

மல்லிகைப் பூ

எப்படி

நிறம்மாறிப் போனது !

ஓகோ . . . . . .

அரசியல் வாதியின்

தோட்டத்தில்

பூத்த மலரோ !



கள்ளிக்குடி சாமிசண்முகம்,
148–ஏ, பெரியார் பாதை, சூளைமேடு,
சென்னை–600 094

# புறப்படு . . . .

உண்டிக்கு வழியின்றி உலகில் வாழ்ந்தாலும்
பெண்டிரை விருப்பிப் பின்செலல் தீதன்றோ. . . !

அண்டிப் பிழைக்க ஆடவரை நாடிப்பின்
மண்டியிடச் செய்யும் மாதரை மறந்திடுக !

மைவிழி நம்மை மயங்கச் செய்யினும்
பொய்க்குழி தோண்டிப் போட்டுப் புதைக்கினும்

வஞ்சமே புரிந்து வாட்டிவந் தாலும்
நெஞ்சமே அஞ்சாமல் நீயிருந் திடுக !

கொஞ்சிக் குலவிக் கூடிப் பழகி
மஞ்சம் மீதில் மயக்கம் ஊட்டிச்

சிந்தை சிதறச் செய்யும் செயலை
நிந்தை புரிந்து நீவிலக் காமல்

மந்தை ஆடாய் மயங்கு வாயேல்
கந்தை யாகிக் கசந்தே போவாய் !

ஆண்மையே ஆட்சி ஓச்சிய புவியில்
காண்கிறோம் பெண்மையே ஆண்மையை ஓச்ச !

ஆண்மைதான் பெண்மையாய்ப் போனதோ...அடடா,
ஆண்மையாய்ப் பெண்மையே ஆனதோ..சொல்சொல் !

ஆண்மையைத் தேடி அலைகின் றாயே....
ஆண்மை நீயே ஆவாய் அறிக !

இதுவே உனக்கு இயம்பிய பாடம் !
புதுமை புரிந்திடப் புறப்படு, புறப்படு !

வெ. கோபாலன் பி லிட். பி.எட் ,
4/37, காரியக்காரத்தெரு, பனையப்பட்டி–622 406
புதுக்கோட்டை மாவட்டம்

| பக்கம் | வரி | பிழை — திருத்தம் |
|---|---|---|
| 14 | 6 | எதர்க்காகப் — எதற்காகப் |
| 36 | 10 | வீரில்லை — வீறில்லை |
| 55 | 21 | காளயர் — காளையர் |
| 56 | 5 | நோவனைந்த — நோவடைந்த |
| 57 | 7 | கூடங்கள் — கூவங்கள் |
| 58 | 1 | சக்ரமாய் — சக்கரமாய் |
| 58 | 12 | செல்வ — வெல்வ |
| 58 | 16 | இரப்ப — இறப்ப |
| 67 | 22 | பின்னேர்கள் — பின்னோர்கள் |
| 69 | 11 | தமிழனரக் — தமிழரைக் |
| 74 | 11 | அறநெரிகள் — அறநெறிகள் |
| 86 | 6 | முகிழ்ந்திட — முகிழ்த்திட |
| 86 | 9 | கண்ணித்தமிழே — கன்னித்தமிழே |
| 86 | 10 | கணிந்திடத் — கனிந்திடத் |
| 88 | 12 | ஒட்டமெடுப்போம் — ஒட்டமெடுப்பாய் |
| 90 | 4 | கண்டெதும்என் — கண்டதும்என் |